# யயாதி

நாடகப்பேராசிரியர்

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.

**இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :—**

லீலாவதி சுலோசனை, சாரங்கதரன், மகபதி. காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண் மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்திரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனை, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், சபாபதி 3-ஆம்பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண் மணியே,புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனை, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், வீபரீதமான முடிவு, சுல்தான் பேட்டை சப்-அஸிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத் தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடக மேடை நினைவுகள் — ஆறு பாகங்கள், நாடகத் தமிழ், பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுர வணிகன் இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச் சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரச குமாரன், சந்தையிற்கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், தமிழ்ப் பேசும் படக் காக்ஷி, விடுதிப் புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுர நாடகச் சபை, சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ஜமீன்தார், சிவாலயங்கள்-இந்தியாவிலும் அப்பாலும்-ஐந்து பாகங்கள், சிவாலய சிற்பங்கள், மனையாட்சி, தீபாவளி வரிசை, இந்தியனும்ஹிட்லரும், காலக் குறிப்புகள், சுப்பிரமணிய ஆலயங்கள், தீயின் சிறு திவலை, கலையோ காதலோ, உணவுப் பொருள்களின் குணங்கள், சபாபதிதுவிபாஷி, சபாபதி துணுக்குகள் முதலியன.

**ஐந்தாம் பதிப்பு**

அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை-1.

காபிரைட்] 1950 [விலை ரூ. [redacted] 2—00

# ய யா தி

## நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| **யயாதி** | .... ஹஸ்திநாபுரத்து மன்னன். |
| **காஞ்சேயன்** | .... யயாதி மன்னன் நேசன். |
| **பப்பரன்** | .... அரண்மனை விதூஷகன். |
| **விருஷபர்வா** | .... அசுர ராஜன். |
| **யது** | .... தெய்வயானை புத்திரன். |
| **பூரு** | .... சன்மிஷ்டை புத்திரன். |
| **சுக்ராசாரி** | .... அசுர குரு. |
| **தெய்வயானை** | .... சுக்ராசாரி புதல்வி } யயாதியின் மனைவிகள். |
| **சன்மிஷ்டை** | .... விருஷபர்வாவின் புதல்வி } யயாதியின் மனைவிகள். |
| **நீலலோசனி** | .... தோழி. |

*ஓர் மஹரிஷி, சங்கீத வித்வான், வேடர்கள், தோழிகள் முதலானோர்.*

**கதை நிகழிடம்:—** பெரும்பாலும் ஹஸ்திநாபுரத்திலும், சிறிதுபாகம் விருஷபர்வாவின் நாட்டிலும், இடையிலுள்ள வனத்திலும்.



உ

என் தந்தை தாயர்

**பம்மல் - விஜயரங்க முதலியார்**

**பம்மல் - மாணிக்க வேலம்மாள்**

ஞாபகார்த்தமாக சமர்ப்பிக்கப்பட்டது.



# யயாதி

## முற்கூறு

இடம்—அரண்மனையில் சங்கீத மண்டபம். காலம்—காலை.

யயாதி ஆசனத்தில் வீற்றிருக்க, சேவகன் விசிறிக்கொண்டிருக்கிறான்.

பப்பரன் ஓர்புறம் நின்றுகொண்டிருக்கிறான்.

ஓர் சங்கீத வித்வானை அழைத்துக்கொண்டு காஞ்சேயன் வருகிறான்.

கா. மஹாராஜா, இவர்தான் நான் முன்புகூறிய சங்கீத வித்வான். தெற்குப் பிரதேசத்தினின்றும் வந்திருக்கிறார், நமது சமஸ்தான வித்வானாக விரும்பி.

ய. மிகவும் சந்தோஷம்.

ச.வி. மஹாராஜா, ஒவ்வொரு வஸ்துவும் அதன் குணகுணங்களை நன்றாகஅறிந்து மதிக்கின்றவராலேயே அது மிகுதியும் பிரகாசிப்பதுபோல், சங்கீத சாஸ்திரத்தில் தெளிவுறத் தேர்ந்து, அதில் வல்லுனரை மகிழ்வுடன் ஆதரிக்கும் மன்னர், தம்மை விட வேறில ரென்றே, சன்னிதானத்தை யடைந்தேன்.

ய. சந்தோஷம். [குறிப்பாய்க் காஞ்சேயனைப் பார்க்கிறான்.]

கா. மகாராஜா தம்முடையசங்கீதத்தைக் கேட்க விரும்புகின்றார், ஏதாவது பாடும்.

ச.வி. கட்டளைப்படி நடக்கக் காத்துக்கொண்டிருக்கிறேன். [பாடுகிறான்.]

ஓர் மகரிஷி வருகிறார்.

ப. ஐஐயோ! சிவபூசை வேளையில் கரடி புகுந்தாற்போல் இது எங்கேயிருந்து வந்தது?

ய. சுவாமி, எழுந்தருளவேண்டும். இது என்னுடைய பாக்கியமே!

கா. நீர் நாளைத்தினம் வாரும். [வித்வான் போகிறான்.]

ம. யயாதி, நீயும் குடிகளும் க்ஷேமந்தானா?

ய. சுவாமி, தமதருளால் எல்லாம் க்ஷேமந்தான்.

ம. சந்தோஷம்; ஆயினும் நம்முடைய அருளால் என்ன இருக்கிறது? எல்லாம் பிரமன் விதித்தபடி யாகிறது.

ய. சுவாமி, இதென்ன இப்படிக் கூறுகிறீர்? எல்லாம் விதியின்படி யானல், நம்மா லொன்றுமில்லையோ? பேதை மாந்தர்களாகிய என்னைப் போன்றவர் களால் ஒன்றும் ஆகா விட்டாலும், தபோநிதிகளா கிய தம்மாலும் ஒன்றும் ஆகாதோ?

ம. யயாதி, என்ன நீயே இப்படிப்புகலுகிருய்? விதியை வெல்ல யாரால் முடியும்?—ஒருவராலும் முடியாது!

ப. ஆம், மஹாராஜா, நம்முடைய கவிராயரும் பூனை விருத்தத்தில்,

ததியோ தனமுத லாகும் பலவாம் தருகறியை
மதியிலா ரந்தோ மறைத்துவைத் தாலுமே மாளச்செயப்
புதியதா மோர்வழி கற்றத னல்மகிழ் பூனைமன்ன
விதியை வெலவுன லாகா தெனவே வுளறுவரே'.

என்றுபிரஸ்தாபிக்கிருர்.

ம. யயாதி,

'தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்ரு
வெறுத்தாலும் போமோ விதி'

என்று கூறப்பட்டிருக்கிறதை அறிந்திலையோ?

ய. ஆகவே, மஹரிஷி தாம் எனக்குக் கூறிய மொழி களால் விதியை யொருவராலுங் கடக்க முடியா தென்று தாம் எண்ணங் கொண்டிருக்கிறதாகத் தோற்றுகிற தெனக்கு.

ம. யயாதி, ஆம், அதுதான் எனது கருத்து. விதியை விலக்கத் தேவராலும் ஆகாதென்ருல், மனிதரால் என்ன ஆகும்?

ய. ஆயினும் விதியை மதியால் வெல்ல லாகாதா?

ம. ஒருக்காலும்ஆகாது, விதிவந்தால்மதிபோம் எவர்க் கும்.

ய. மஹரிஷி, அப்படி நிற்க, பூர்வம் சாவித்திரி தனது மதியால் தன் நாயகனுடைய விதியை மாற்றியதாக வும், மார்க்கண்டேயரும் அவ்வண்ணமே தமது விதியைக் கடந்ததாகவும் கூறப்பட்டிருக்கிறதே; இதற்கென்ன உத்தரவளிக்கிறீர்?

ம. யயாதி, சாவித்திரியின் கணவன் இறந்து மீண்டா னென்பதை மறந்தாயோ? அவன் 'அவ்வயதில் இறப்பான்' என்று விதித் திருந்ததாக நாம் அறிந் தோமே யொழிய, 'இறந்துமீளான்' என்று விதித் திருந்ததாக எங்குங் கூறப்படவில்லை. ஆகவே, அவன் விதியின்படி இறந்தான், பிறகு மீண்டான். அவ்வண்ணமே சிவபெருமா னருள்செய்தபடி மார்க் கண்டேயருக்கு 'என்றும் பதினறு வயது' விதிக் கப்பட்டிருந்ததே யொழிய 'பதினறுவது வயதில் இறப்பார்' என்று விதித்திருந்ததாகக் கேள்விப் பட்டோ ரில்லை.

கா. தவசிரேஷ்டரே, நீர் கூறும்படியான நியாயங்கள் எனக்கென்னவோ ஏற்றனவாகத் தோற்றக் காணும். நான் இவ்வண்ணம் கூறுவதற்காக தாம் என்னை மன்னிக்கவேண்டும்.

ய. ஆம், எனக்கும் அப்படியே தோற்றுகிறது.—அது போகட்டும். சுவாமி, பின்வரும் சமாசாரங்களை யறியக்கூடாத என்னைப்போன்றவர்களால் விதியை வெல்ல முடியாதென்று கூறுவது நியாயமாகத் தோன்றினும், வரப்போகிற சமாசாரங்களை அறிந்த தம்மைப்போன்ற ஆன்றோர்களால் ஏன் விதியை விலக்க முடியாதென்று எனக்கு ஒரு சந்தேகம் பிறந்திருக்கிறது.

ம. அரசனே, நான் முன்பே கூறினேனே. தெரிந் தாலுந் தெரியா விட்டாலும் ஒன்றுதான்; விலக்க முடியாது. மனிதர்களுக்குத் தெரியாதிருத்தலே நலமென நினையும், ஒருவிதத்தில்.

ய. தெரிந்தால் ஏன் விலக்க முடியாது?

கா. ஆம், தெரிந்தால் ஏன் விலக்க முடியாது?

ம. உங்களுக்கு நியாயமெடுத்துக் கூறுவதிற்பயனில்லை. உண்மையை நேரில் ரூபித்தலே தகுதி. யயாதி ராஜனே, இன்னும் சிறிது காலத்திற்குள் உமக்கு நேரிடப்போகிற ஒரு விஷயத்தைக் கூறுகிறேன். அதை உமது மதியால் நடக்க விடாமற் செய்து பாரும். இன்னும் சில தினங்களுக்குள், நீர் இரண்டு ஸ்திரீகளை விவாகஞ் செய்துகொள்ளப் போகிறீர். அதனால் பிறகு உமக்குப்பெருந்தீங்கொன்று நேரப் போகிறது. அதைத் தடுத்துக்கொள்ளும் பார்க்க லாம். அப்படி அதைத் தடுத்துவிடுவீராயின், விதியை மதியால்வென்று விடலாம் என்று நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

ய. அப்படியா ?—எதோ பார்ப்போம்.

ம. யயாதி, சிலகாலம் சென்றபிறகு நான் உம்மை வந்து பார்க்கிறேன். நான் கூறியது ஞாபகமிருக்கட்டும். எனக்கு விடை கொடும், நான் போய் வருகிறேன்.

ய. சுவாமி, தாம் இன்று இவ்விடத்தில் எழுந்தருளியது என் பூஜாபலனே! தங்களுக்கு இவ்வளவு சிரமங் கொடுத்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும். தம்முடைய வருகையால் நான் தன்யனுனேன்.

கா. சுவாமி, தம தருள் என்றும் இவ்விட மிருக்க வேண்டும்.

ம. ஜெய விஜயீபவ!

ப. மஹாராஜா, நான் வழிவிட்டு வருகிறேன். [போகிறுன்.]

ய. காஞ்சேயா, எப்படியாவது நான் எனது மொழியை ரூபிக்க வேண்டும். ஆயினும் மஹரிஷி கூறிய திடத்தை நோக்குங்கால் எனக்குச் சற்று அச்சமாகவே யிருக்கிறது. ஆயினும் பார்ப்போம். நான் இரண்டு மனைவிகளை யுடையவனுவேன் என்றல்லவோ கூறினர். முதலில் நான் விவாகமே செய்து கொள்ளாமல் இருந்துவிடுகிறேன். பிறகு பார்ப்போம்.

கா. அரசே, அப்படி செய்வது நியாயமன்று. தம்முடைய பழமையான வம்சத்திற்கு ஒரு குறையும் வாராமல் பாதுகாப்பது தம்முடைய கடமையாதலின், தாம் விவாகம் செய்துகொள்ளவேண்டும் எப்படியும். இரண்டு விவாகஞ் செய்துகொண்ட பிறகுதானே உமக்கோர் தீங்கு நேரிடுமென்று மஹரிஷி கூறியிருக்கிறுர்.

ய. ஆம், நீ கூறுவது—நியாயந்தான்—ஆயினும்—

பப்பரன் வருகிறுன்.

ப. மஹாராஜா, தங்கள்உத்திரவின்படி வேட்டைக்குப் புறப்பட எல்லாம் சித்தமாயிருக்கிறதென அறிவிக்கும்படி வேடர்தலைவன் கூறினுன்.

ய. சரிதான்,—காஞ்சேயா, வா புறப்படுவோம் சீக்கிரம்.—விதூஷகா, நீயும் வேட்டையாட வருகிறுயா? நீ மகா தைரியசாலி யாயிற்றே!

ப. மஹாராஜா, என்னை நானே புகழ்ந்து கொள்வது நியாயமல்ல. ஆயினும் மஹாராஜா, நீர் வேட்டைக்

குச் சென்ருல், இராஜ்ய காரியம் பார்த்துக்கொள்வதற்கு ஒருவரு மில்லாதபடியால் நான் அவசியமாக அரண்மனையி லிருக்கவேண்டும்.

ய. பெரிதன்று, பப்பரா, நீ வேட்டையாடும்பொழுது நான்பார்த்ததேயில்லை. நீயும் புறப்படு.

ப. உத்திரவுபடி.—மஹாராஜா, ஒரு விண்ணப்பம்.

ய. என்ன? சீக்கிரம் சொல்.

ப. நான் நேற்றைத்தினம் தங்களிடம் விண்ணப்பம் செய்த கவி வந்திருக்கிருர். அவருக்கு நமதரண்மனையில் உத்தியோகம் வேண்டுமாம். ஊறுகாய்ப்பாடல், மாங்கொட்டை அந்தாதி, பூனைவிருத்தம், கருங்கற் கலம்பகம் முதலான பெரிய காவியங்களையெல்லாம் பாடியிருக்கிருர். அவர் எனது அத்யந்த நேசர், ஆகவே—

கா. ஒரு கபி இன்னெரு கபியைத் தேடிஞற்போ லிருக்கிறது!

ய. பப்பரா, அதைப்பற்றி பிறகு யோசிப்போம். வேண்டுமென்ருல் அவரையும் வேட்டைக்கு வரச் சொல்.

கா. ஆமாம், தவருது வரச்சொல். அங்கே அவருடைய பந்துக்கள் அனேகரை மரங்களிலும் வேறிடங்களிலும் அபரிமிதமாய்க் காணுவார்.

[எல்லோரும் போகிருர்கள்.]

---

## முதல் அங்கம்.

இடம்—வனம். காலம்—காலை.

மிருகங்களை விரட்டும்சந்தடி தூரத்தில் கேட்க, சில வேடர்கள்வருகின்றனர்.

மு.வே. அடே, சீக்கிரம் கட்டுங்கடா வலைங்களே. தோ! புலிங்களெல்லாம் பொதார்லே யிந்து கெளப்புராங்க, கேக்கலே சத்தம்? போறு அப்படியே அமுக்கலாம், புலிங்களெல்லா.

இ.வே. ஆ ஆம்! ஆ ஆம்! சீக்ரம்! சீக்ரம்! அப்பா! ஒரு புலிக்கி ரெண்டு பொன்னுடா, ரெண்டுபொன்னு!

மூ.வே. அடடே! இஸ்து கட்ரா, அவஸர்த்தெப்பாரு! மூயிகி போச்சே! இஸ்து கட்ரா, இல்லாப்போனு சின்னு சின்னு பக்சிங்கல்லாம் ஓடிப்பூடுமே! நம்ப வேலெயெ மின்னே பண்ணிட்டு அப்பறம் போவோண்டா.

**மு.வே.** அடடே! மறந்துப் பூட்டேன்டா! அவஸர்த்லெ பக்ஷிங்களுக்கு எரெ கொண்டாரமறந்துப் பூட்டேன்டா!

**மூ.வே.** சர்தான், கூச்சே போடாதே. நாங் கொண்ணுந்திக்கரேன், உன்னெப்போலெ ஏமாந்தவனு? அல்லாம் பய்யிலெ யிக்குது.

**இ.வே.** அதோதோதோ! அத்தோ ஓடுது புலி, புலி! பெரும் புலி! சீக்கிரம் இந்தயெயவு வேலெயெ முடிச்சுட்டுப் போகலாம் வாங்கடா!

[வலைகளைக் கட்டுகிறார்கள் விரைவுடன்.]

**மூ.வே.** அடடடே, பசங்களா, இங்கே பாருங்கடா. அவசரப் பட்டீங்களா ஒண்ணும் ஆப்டாது. அதுவுங் கெட்டுப்பூடும், இதுவுங்கெட்டுப்பூடும். ஒரு புலிகூட ஆப்டாது; பச்சிங்களும் அல்லாந் தப்சிக்கும்.

**இ.வே.** சர்தான், வேலெ தீந்துது, வாங்க. அயினரப்பா! நீ தான் தொணெ!--வாங்க! வாங்க!

[வேடர்கள் போகிறார்கள்].

காஞ்சேயனும், யயாதியும் வருகிறார்கள்.

**கா.** [புல்தரையில் படுத்து] இனி என்னால் ஒரு அடியும் எடுத்துவைக்க முடியாது. ஐயனே, எனக்கு மிகவும் இளைப்பாயிருக்கிறது. என்கால்கள் சோருகின்றன. இங்கு சற்று உட்கார்ந்து இளைப்பாறிப் பிறகு வேட்டைக்குச் செல்வோம்.

**ய.** சீ! காஞ்சேயா, இதென்ன? இதற்குள் இளைப்பா! இக்கொடிய காட்டில் இன்னும் எத்தனைத் துஷ்ட மிருகங்களிருக்கின்றன! அவைகளை யெல்லாம் ஹதமாக்க இன்னும் நமக்கு எவ்வளவு வேலையிருக்கிறது!

**கா.** அரசே மன்னியும், சற்றிளைப் பாறவிட்டால் என்னால் ஒன்றும் முடியாது. என் பொருட்டுத் தாமும் சற்று தங்கும்.

**ய.** பிரிய நேசனே, அப்படியே ஆகட்டும். [உட்கார்ந்து] ஆனால் அதிக நாழி கழிக்கலாகாது.—சீ! இதென்ன கஷ்டம்! நான்கு புறமும் வேட்டை நடந்துகொண்டிருக்க நான் இங்கு சும்மா அசைவற்றிருக்கவேண்டி வந்ததே! எப்படி பொறுத்திருப்பது? ஆயினும் உன்னைக்கடிந்துகொள்ள வில்லை. உன் பொருட்டே என்உற்சாகத்தை அடக்க வேண்டி வந்தது.

கா. ஆனால், உமக்கு விநோதமான வேறு தொழில் சொல்கிறேன். அரசே, அதோ பாரும். மரக்கிளைகளினுச்சியில் எத்தனை காட்டுப் பக்ஷிகள் சிறியவும் பெரியவுமாய் வலைகளிற் சிக்கி வெளியிற்போக வழியறியாது தத்தளிக்கின்றன!

ய. ஐயோ பாபம்! அவைகளின் விதி அவ்வளவுதான்!

கா. அரசே, என்ன சொன்னீர்? இதற்குள் உமது மனம் மாறிவிட்டதா? விதியென்று ஒன்றுண்டென ஒப்புக்கொள்ளுகிறீரா?

ய. இல்லை, இல்லை, காஞ்சேயா, ஏதோ ஞாபக மறதியாய்க் கூறினேன். இதோ பார், இப்பக்ஷிகளெல்லாம் இவ்வாறு சிக்கி இறக்க விதிக்கப்பட்டனவென்று நினைக்கிறாயோ?—சரி, இவைகளை யெல்லாந் தப்ப விடுகிறேன். [வலைகளிற் சிக்கிய பக்ஷிகளை விடுவித்து] இப்பொழுதென்ன சொல்கிறாய்? இவைகளின் விதி என்ன வாயது? உனது மஹரிஷி இதற்கென்ன சொல்வார்?

கா. ஓ! இப்பக்ஷிகளெல்லாம் முதலில் இம்மாதிரி சிக்கி அவதிப்பட்டு பிறகு விடுவிக்கப்படுமென்று, விதிக்கப்பட்டன, என்பார்.

ய. அதுவும் நல்ல யுக்திதான்!—சரி, இதற்குத்தான் இப்படிச் சொல்லினை, அவர் எனக்கு விதித்த விதியினின்றுந் தப்பப் போகிறேனே அதற்கென்ன சொல்லப்போகிறாய்?

மூட்டை யொன்றெடுத்துக்கொண்டு பப்பரன் வருகிறான்.

ப. [மூட்டையைக் கீழே வைத்துப் பெருமூச்செறிந்து] அப்பா! அப்பா என்ன வேலை! என்ன இழவு! என்ன கஷ்டம்! சீச்சீ! இந்தவேலை நமக்கு வேண்டாமப்பா இனி.

ய. ஆ! பப்பரா, எங்கிருந்தாய் இந்நேரம்? இங்குவந்தது முதல் உன் முகமே என் கண்ணுக்குமுன் அகப்படவில்லையே!

கா. தூக்கம் சரியாக வந்ததா?

ப. ஓ! ஆமாம்; தாங்களிப்பொழுது தூங்கப் பார்க்கிறீர்களே, அதை யென்மீது சாற்றிச் சொல்லுகின்றாற்போ லிருக்கிறது. உம்! என்னை வேட்டையிலே பார்க்கவேண்டும்! நீங்க ளெங்கிருந்தீர்க ளிந்நேரம்? இக்காட்டில் வாழும் புலிகளை ஆயிரக் கணக்காய் நான் கொன்று சாய்த்தபொழுது? காட்டிலே போய்ப் பாருங்களையா, ஒரு புலியாவது இருக்கிறதாவென்று.

ய. ஓஹோஹோ! என்ன வேட்டைக்காரன்!—அதிருக் கட்டும், இதென்ன மூட்டை?

ப. அரசே, நமது மந்திரியிடங்கூறி நமது பொக்கசம் அவ்வளவையும் என்னிடம் ஒப்புவித்துவிடும்படி கட்டளையிடும். தாங்கள் க்ஷத்திரிய ரல்லவா? தங்கள் வாக்கினின்றுந் தவறு வீரா? ஒரு புலிக்கு இரண்டு பொன் அல்லவா கணக்கு?

கா. என்ன! இவைகள்புலிகளின்தலைகளா? மூட்டையைப் பார்த்தால் அப்படிக் காணவில்லையே.

[மூட்டையை யவிழ்க்கிறான்.]

ப. இல்லை, இவைகள் புலிகளின் வால்கள்.

ய. வால்கள்! உன்னை யார் புலிவால்களைக் கொண்டுவரச் சொன்னது என்னிடம்? நான் தலைகள் அல்லவோ வேண்டுமென்றேன், தலைகளுக்கல்லவோ இரண்டு பொன் விகிதம் கொடுப்பதாக இசைந்தேன்.

ப. தலையானாலென்ன? வாலானாலென்ன? அதிலொன்றும் பேதமில்லை—ஏனையா, மந்திரியாரே, தாம் எண்ணுகிறீரா, நான் எண்ணுவதா? [எண்ணுகிறான்.] ஒன்று, இரண்டு, மூன்று—

ய. நிறுத்து, நிறுத்து, இவைகளின் தலைக ளெங்கே?

ப. தலைகளை யேன் கொண்டு வரவில்லையென்றால், அநேகங் காரணங்களிருக்கின்றன. முதலில், தலைகளை மூட்டை கட்டினால் பெரும் மூட்டையாகும்; யார் சுமப்பது? இரண்டாவது, இந்தப் புலிகளுக்குத் தலைகளே யில்லை; நான் வேட்டையாடிய பொழுது தலைகளில்லாமல் இருந்தன, சரிதானென்று வால்களை அறுத்துக்கொண்டு வந்தேன்—

ய. [நகைத்து] சரிதான், சரிதான்! நினைத்தேன், நினைத்தேன்!

கா. [நகைத்து] சரி, சரி! பப்பரா, இதோ, உன் தைரியத்தைப்பற்றி உன் சிநேகிதர் கவிராயரை ஓர்காவியம் எழுதச்சொல்.

ய. [திடீரென்றெழுந்து] அதோ ஒரு புலி! காஞ்சேயா, வா வா! சீக்கிரம்!

[காஞ்சேயன் பின் தொடர, வேகமாய்ப் போகிறான். இறந்தாற்போல் பப்பரன் கீழே விழுகிறான்.]

மற்றொரு புறம் வேடர்கள் வருகிறார்கள்.

**மூ.வே** அய்யோ! இதென்ன செத்துப்பூட்டானா?
அய்யய்யோ!—அய்யா, அய்யா! [எழுப்புகிறான்.]

**ப.** [மெல்ல எழுந்து] ஓ! தூங்கிவிட்டேன். — தூங்காம லென்ன செய்வது? என்ன வேட்டை, என்ன வேட்டை!

**இ.வே.** என்னா! நீ வேட்ட ஆடுனெ அய்யா? நாங்க யாரும் பாக்கவேயில்லியே! ராஜா உங்களெ தேடச் சொன்னாரு, எங்கே பாத்தாலுங் காணமே.

**மூ.வே.** அடடே, பசங்களா, இதோ பாத்திங்களடா! இதோ பாத்திங்களாடா இந்த மூட்டயே! நாம்ப கொண்ண புலிங்க வாலுங்களே யாரோ அறுத்துக்கிணுப் பூட்டானிண்ணு பேசிக்கினோமோ, இந்த ஆசாமிதாண்டா! இதோ பாருங்கடா!

**ப.** அடே, சோம்பேறிப்பசகளே! தொடாதீர்கள் அதை; நான் அத்தனைப் புலிகளையுங் கொன்றிருப்பதாவது, நீங்கள் கொன்றதாகக் கூறுவதாவது? வேண்டுமென்றால் மஹாராஜாவைக் கேட்டுக் கொள்ளுங்கள். அவர்தான் எனக்குப் பரிசு கொடுக்கப் போகிறாரே!

**இ.வே.** அப்படியா? பாக்கலாம். முதல்லே, நீ கொண்ண புலிங்க எங்கே? ராஜா வந்து புலி தலெங்கதானெ கொண்டாரச் சொன்னாரு.

**ப.** அதெல்லாந் தெரியுமடா எனக்கு! நான் கொன்ற புலிகளை யெல்லாம் வாலைப் பிடித்துக்கட்டி இழுத்துக்கொண்டு வந்தேன். வரும்பொழுது மஹாராஜா இந்த காட்டாற்றங்கரையிலே யிருந்தார். இப்பாழும் ஆற்றில் நீந்திவரவேண்டி வந்தது. அப்படி வரும்போது ஆற்றின் வேகத்தில் உடல்களெல்லாம் அறுத்துக்கொண்டு போய்விட்டன. ஆகவே மிகுந்த வால்களை மாத்திரம் பத்திரமாய்மூட்டை கட்டிக் கொண்டுவந்தேன் மகாராஜாவிற்கு. மஹாராஜா உங்களை நம்புகிறாரோ அல்லது என்னை நம்புகிறாரோ பார்ப்போம்.

**எல்லோரும்.** அடடே என்னா தயிர்யசாலி! என்னா வேட்டெக்காரன்! டேயப்பா! பாருங்கடா! [நகைக்கிறார்கள்]

மற்றொரு வேடன் வருகிறான்.

**நா.வே.** டேய்! என்னடா அது இங்கே கூச்சலும் சிரிப்பும்? நம்ம எஜமான் ராஜாவெ தேடியாரச்சொல்லி நம்ப

எல்லார்க்கும் கட்ளெ யிட்டிக்கிறுரு, இங்கே சிரச் சிக்கி னிருக்கிறிங்களா! நம்ப ராஜாவும் மந்திரியும் எங்கே போறுங்கோ தெரியுமா?

**மு.வே.** தெரியும், தெரியும். ரெண்டுபேரும் எத்தெயோ ஒண்ணெ தெரித்திக்கினு போறுங்கோ இப்டி.

**நா.வே.** ஆறு வாங்க, எப்டியும் தேடிப்பிடிக்கணும் இருட்டாவுரத்துக்குள்ளே. [வேடர்கள் நால்வரும் போகிறுர்கள்.]

**ப.** ஒவ்வொருத்தனும் அவனுக்குத் தக்கபடி வாழ வேண்டியிருக்கிறது இந்த உலகத்தில். இது என் வாழ்வென்று விதிக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய இடத்திற்கு நாம் போவோம். மஹாராஜா எப்படியும் வந்து சேர்வார். [போகிறுன்.]

## இரண்டாவது அங்கம்

இடம்: விருஷபர்வாவினுடைய நந்தவனத்திலோர் தடாகம்.
காலம்—காலே.

சற்றுதூரத்தில் **யயாதியும், காஞ்சேயனும்** வருகிறுர்கள்.

**ய.** ஆ ஹா! காஞ்சேயா, நாம் வழிதப்பி எங்கு வந்துவிட்டோம் பார்த்தனையா!

**கா.** ஆம், நாம் இதுவரைக்கும் வந்திராத ஓர் நூதன இடமென்றே தோற்றுகிறது.

**ய.** காஞ்சேயா, இப்புதுமையைக் கண்டனையா! இதோ, ஒருபுறத்தில் ஒரு மஹரிஷியின் ஆச்சிரமத்தைப் போற்ருேற்றுகிறது! அதோ மற்றொரு புறத்தில் அரசன் அரண்மனைபோற் ருேற்றுகிறது. என்ன ஆச்சரியம்!

**கா.** மிகவும் விந்தையாகத்தா னிருக்கிறது! ஒருபுறத்தில் வேதபாராயண ஒலியும், மற்றொரு புறத்தில் சங்கீதக் கேளிக்கையின் ஒலியுங் கேட்கிறது!

**ய.** நண்பனே, இக்காக்ஷியை நோக்குமிடத்து இல்லறத்திற்கும், துறவறத்திற்கும் உண்டான ஏற்றத் தாழ்வைப்பற்றி நான் நினைக்கவேண்டி வருகிறது.

**கா.** ஏன்? எது மேலானதென்று கூறுகிறீர்?

**ய.** சந்தேகமென்ன? துறவறமே மேலானது. இன்றைக்கிருந்து நாளைக்கு அழியுஞ் செல்வம் இல்லறச் செல்வம். அழியாச் செல்வம் துறவறமே. இவ்வெழுநிலே மாடம் கால் சாய்ந்துற்றுக் கழுதைமேய்

பாழாகினு மாகும் நாளை. இல்லறப் பயனோ இவ் வற்பவாழ்வு மட்டே. தூயதாய துறவறப் பயனே எக்காலமும் நிலைத்திருப்பது. துறவறத்தை விட்டு இல்லறத்தை விரும்புவது, ஒரு ஸ்திரீயை யனுப வியாது நீரிற்றோற்றும் அவளுடைய பிரதி பிம்பத் தை யனுபவிப்பதுபோலும்.

கா. ஏன், இல்லறத்திலே யிருந்தும் வீடுபெறலாகாதோ?

ய. பெறலாம், ஆயினும் அது கடினம். இல்லறத்தி லிருப்பவனுக்கு எந்நேரமும் மனச் சஞ்சலமே. சஞ் சலமற்ற வாழ்வு துறவறவாழ்வே. இந்நிலவுலகத்திற் கெல்லாம் அரசனாகித் தான் விரும்பும்படியான எல் லா இல்லறச் சுகத்தையும் பெறத்தக்கவனாய் ஒரு வன் இருந்த போதிலும், எங்கு இந்த நிலைமையி னின்றும் கீழே விழுகிறோமோ, என்னும் மனக் கவலை அவனை எந்நேரமும் பாதிக்கிற தல்லவா? துறவிகளுக்கோ அப்படியில்லை. ஒன்று மில்லாத வருக்கு 'ஏதாவது போம்' என்னுங் கவலை யில்லை அல்லவா? அணிமுடி யணிந்தஅரசர்க்கே கவலை, சடைமுடி தரித்த சான்றோர்க் கேது?

கா. ஐயனே, நீ ரென்ன சொன்னபோதிலும் நான் ஒப்புக்கொள்ளவே மாட்டேன். இல்லறமே மேலா னது.

ய. காஞ்சேயா என்ன மூடனைப்போல் வாதிக்கிறாய்? நீ கூறுவதற்கு ஏதாவது நியாயமிருந்தா லெடுத் துக் காட்டு.

கா. ஆம், அரசே. நீர் கூறுகிறபடி துறவறமே மேலா னதா யிருக்கட்டும். ஆயினும் இவ்வுலகிலுள்ளோ ரெல்லாம் துறவிகளாய் விட்டால் பிறகு இவ்வுலக மெவ்வாறு விருத்தியாவது? உலகில் துறவிகளு மிருக்கவேண்டும், ஏனையோரு மிருக்கவேண்டும், அவர்களைக்காக்க அரசருமிருக்கவேண்டும்.

ய. அப்படிப்பட்ட அரசர்கட்கு வேடிக்கையாய்க் காலம் போக்க உன்னையொத்த நண்பர்களு மிருக்கவேண் டும்! புத்திசாலி தான்! வா, எனக்குக் களையாயிருக் கிறது; அதோ அப்பூங்காவிற் சென்று இளைப் பாறுவோம். (போகிறார்கள்)

கூந்தலை யுலர்த்திக்கொண்டு குளத்தின்படியொன்றில் சர்மிஷ்டை வந்து உட்காருகிருள். நீலலோசனி வருகிருள்.

நீ. அம்மா, இதென்ன புதுமை? இக்காவில் எல்லோரும் விளையாடி வசந்தோற்சவங் கொண்டாடுகையில் தாம் மாத்திரம் தனியாக இவ்வாவியின் படியில் சும்மா உட்கார்ந்துகொண்டு இருக்கிறீர்கள்? தடாகத்தில் ஏன் எங்களுடன் சந்தோஷமாய் விளையாடவில்லை? சீக்கிரம் ஸ்நானத்தை முடித்து விட்டு கரையேறி விட்டீர்கள், என்ன விசேஷம்?

ச. விசேஷம் என்ன? ஏதோ நீரில் அதிக கால மிருக்க விருப்ப மில்லை, வந்துவிட்டேன். அதற்கு விசேஷ மொன் றிருக்க வேண்டுமோ?

நீ. அப்படியல்ல, வருஷாவருஷம் இதுவரையில் நாம் வசந்தோற்சவம் கொண்டாடும்பொழுது மற்றெல்லோரைப் பார்க்கிலும் தாம் அதிகமாக விளையாடி விநோதமாய்க் காலங்கழித்து வருவீர்கள், இவ்வருஷம் தாம்அப்படிச் செய்யவில்லை; இதற்குக் காரண மில்லா திருக்குமா?

ச. உன்னை நான் நன்ரு யறிவேனே! ஏதோ ஒன்றை மனத்தில் நினைத்துக்கொண்டு, நாம் எண்ணியது சரியா அல்லவா, என்று என்னைப் பரீக்ஷிக்கிருயோ?

நீ. நானுவது உம்மைப் பரீக்ஷிப்பதாவது? ஏதோ நேற்றைத் தினம் ஒன்று என்புத்தியிற்பட்டது இவ்விஷயத்தைப்பற்றி. அதை யுமக்குக் கூறுவானேன், அதற்கு நீர் கூறும்படியான கடுமொழியைக் கேட்பானேன்? வாரும், சீக்கிரம் அரண்மனைக்குப் போகலாம். சூரியன் உச்சியில் வந்துவிடுவான்.

ச. சீ! வா இப்படி. என்ன பட்டது உன் புத்தியில் நேற்று? உண்மையைக் கூறு.

நீ. கோபித்துக்கொள்ளக் கூடாது கூறுகிறேன்.

ச. இல்லை, கோபித்துக் கொள்ளவில்லை சொல்.

நீ. நேற்றைத்தினம் சாயங்காலம், வசந்த மகோற்சவ ஆரம்பத்தில், நமது நந்த வனத்தில் ஸ்திரீகளெல்லாம் தமது கணவருடன் கூடி, நீர்வாரி யிறைத்தும், புஷ்பம் பறித்தெறிந்தும், மகரந்தத்தைத் தூவியும், இன்னும் பலவிதமாக விளையாடி வந்ததைத் தாம் உப்பரிகையின் மீதிருந்து பார்த்தீரல்லவா? அப்பொழுது உமதுமுகத்தைநான் உற்றுப்பார்த்த பொழுது, மற்றப் பெண்களைப்போல நாமும் கண

வனுடன் கூடி வசந்தோற்சவங் கொண்டாடுவதற்கில்லையே யென்று வருத்த முறுவதுபோல தோற்றியது. அவ்வருத்தத்தினலேயே இப்பொழுதும் தாம் எங்களுடன் விளையாடாது இங்கு தனியாக உட்கார்ந்திருக்கிறீர் என்று தோற்றுகிறது.

ச. மிகவுங் கெட்டிக்காரி! என்ன புத்தி நுட்பம்! இச் சிறந்த புத்தியை என்ன விலைக்கு வாங்கினை?

தே. [குளத்திலிருந்தபடியே] நீலலோசனி! என்னுடைய ஆடை எங்கே, காணேமே? அதைத்தேடி சீக்கிரம் எடுத்துவா.

நீ. அம்மா! இதென்ன, தெய்வயானையினுடைய ஆடையை யுடுத்துக்கொண்டீரே நீர்? அவளுடைய ஆடையைக் காணேமென்று தேடுகிருளே. நனைந்த ஆடையுடன் அதோ குளித்துவிட்டு நிற்கிருள் பாரும்!

ச. ஐயோ! குளித்தவுடன் நானும் ஏதோபாராது ஞாபக மறதியாக அவளுடைய ஆடையைஉடுத்திக்கொண்டு வந்து விட்டேன்! இப்பொழுதென்ன செய்வது? பெரிதல்ல. என்னுடைய விலையுயர்ந்த ஆடையை அக்கரையில் வைத்திருக்கிறேன். அதையெடுத்து உடுத்திக்கொள்ளும்படி சொல் போ.

[நீலலோசனி போகிருள்.]

ஆ ஹா! இந்த நீலலோசனி எப்படியோ என்னுடைய மனத்தை யறிந்துவிட்டாள் பார்த்தாயா! ஆம், அவள் கூறியது உண்மையே. நான் மங்கைப் பருவத்தை யடைந்த பிறகு முன்பு போல் தனியாக வசந்த மகோற்சவங் கொண்டாடுவதென்றால் எனக்கு விருப்பமில்லை. மற்றபெண்கள் தங்கள் தங்கள் கணவருடன் கூடிக் குலாவும்பொழுது, நானும் என்னுடைய கணவனுடன் எப்பொழுதுல்லாசமாயிருக்கப்போகிறேனே, என்னும்எண்ணம் உண்டாகிறது—

சிறந்த சரிகைச் சேலையைக் கையிலே வைத்துக்கொண்டிருக்கும் நீலலோசனியுடன் தெய்வயானை வருகிருள்.

தே. அடி, சர்மிஷ்டா, என்னுடைய ஆடையை நீ யுடுத்திக்கொண்டு, உன்னுடைய ஆடையை நான் உடுத்திக்கொள்ளும்படியா சொல்லி யனுப்பினை?

ச. தெய்வயானை, என்மீது கோபங்கொள்ளாதே. நான் ஸ்நானஞ்செய்து கரைக்கு வந்தவுடன், ஏதோ

ஞாபக மறதியாய் உன்னுடைய ஆடையை உடுத்திக் கொண்டேன்.

தே. அதுபோனூற் போகிறது. உன்னுடைய ஆடையை நான் உடுத்திக்கொள்ளும்படி சொல்லியனுப்பினை யாமே, உண்மை தானு அது ?

ச. ஆம், உண்மைதான். அதில் என்ன தவறு ?

தே. என்ன சொல்லினை, என்ன சொல்லினை ?

ச. தெய்வயானை, என்ன அதிகமாகக் கோபித்துக் கொள்ளுகிறுய்? நான் செய்தது தவறுதான், ஒப் புக்கொள்ளுகிறேன். ஆயினும் நீ என்னுடைய ஆடையை உடுத்திக் கொள்ளக் கூடாதோ ? உன் னுடைய மாசுற்ற ஆடையைப் பார்க்கிலும் என் ஆடை நூறு மடங்கு அதிக விலையுயர்ந்தது தானே!

தே. அடி, சர்மிஷ்டா, விலையுயர்ந்ததாயிருந்தாலென்ன? நான் பிராம்மண குலத்துதித்த பெண்ணென்பதை மறந்தாயோ ? இழிந்த அசுரர்குலத்திற் பிறந்த பெண்ணுகிய நீ அணிந்த வஸ்திரத்தையோ நான் தீண்டுவேன் ? அதை நான் காலால் தீண்டினுலும் ஸ்நானம் செய்யவேண்டுமே !

ச. சீ ! அதிகமாகப் பேசாதே. என்ன, மரியாதை யில் லாமற் பேசுகிறுய் ? பிச்சை யெடுக்கும்படியான பிராம்மண குலத்திற் பிறந்த உனக்கு இவ்வளவு வாயா ?

தே. அடி! என்னசொல்லினை? நீசகுலத்திற் பிறந்த நீயா என்னை இப்படிக் கேட்பது? அசுரராஜனுகிய விரு ஷபர்வாவினுடைய பெண்ணென்று கர்வம் வந்து விட்டதோ? உன்னுடைய தகப்பனுக்கும் உனக் கும் வந்தவாழ்வெல்லாம்என்தகப்பனுகியபிராம்மண குலத்துதித்த சுக்ராசாரியரால் வந்ததென்பதை மறந்து விட்டாயோ ? நீ யிப்பொழுது கூறிய மொழிக்கு உனது நாவை இந்நேரம் அறுத்தெறிந் திருக்கவேண்டும். அற்பக்குலத்து ஸ்திரீ! நீசஸ்திரீ! நீ என்னை, உயர்குலத்துதித்த என்னை !—

ச. என்ன சொல்லினை!

[தெய்வயானையைக் குளத்தில் தள்ளிவிடுகிருள்.]

நீ. ஐ ஐயோ! அம்மா! அம்மா! இதென்ன ?

ச. நான் தீண்டியதால் உண்டாகிய அசுத்தத்திற்காக அவள் ஸ்நானஞ் செய்யட்டும். [போகிறாள்]

நீ. [குளத்துட்பார்த்து] அம்மா, தெய்வயானை! அப்படியே அந்தக்கொடியைச் சற்று பிடித்துக்கொண்டிரும்! நான் இதோ ஓடிச்சென்று யாரையாவது அழைத்துக் கொண்டு வருகிறேன் [வேகமாய்ப்போகிறாள்.]

தெ. [குளத்துளிருந்தபடியே] ஆபத்பாந்தவா! அநாத ரக்ஷகா! இங்கொருவருமில்லையா என்னைக் கரையேற்ற? ஈசனே! ஈசனே!

யயாதியும் காஞ்சேயனும் மறுபடி வருகிறார்கள்.

ய. அதோ ஒரு தடாகம்போல் தோன்றுகின்றது. அங்கே சென்று நமது தாக விடாயைத் தீர்த்துக் கொண்டு, பிறகு நமது நகர்க்கு வழியறிந்து செல்வோம். [தடாகத்தின் சமீபமாய்ச் செல்கிறார்கள்.]

தெ. ஐயோ! நான் இறந்துபோகிறேனே! என்னைக் கரையேற்றுவாரில்லையா? ஜகத்ரக்ஷகா! ஜகதீஸ்வரா!

ய. தோழனே! இதென்ன! யாரோ ஒரு பெண் ஓலமிடுகின்றாற் போல் கேட்கிறது?

கா. ஆம், ஆம்! வாரும், சீக்கிரம் போய்ப் பார்ப்போம். இவ்வாவியின்கண்ணிருந்து வருகிறது அக்குரல்.

ய. காஞ்சேயா, அதோ பார்த்தனையா? யாரோ ஒரு பெண் தவறி இவ்வாவியில் விழுந்து விட்டாற்போலிருக்கிறது. நான் இறங்கிக் கரை யேற்றுகிறேன். [குளத்து ளிறங்குகிறான்.]

கா. அரசே! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!

ய. [கையால்தெய்வயானையைப்பிடித்துக்கரையேற்றி]பெண்ணே, நீ யார்? நீ இத்தடாகத்தில் விழும்படியாக எப்படி நேரிட்டது?

தெ. ஐயா, நான் அசுர குருவாகிய சுக்ராசாரியினுடைய புதல்வி. எமதரசன் விருஷபர்வாவின் மகளாகிய சர்மிஷ்டையுடன் இங்கு இக்குளத்தில் வசந்தோற்சவங் கொண்டாடி ஸ்நானம் செய்யவந்தேன். ஒரு காரணம்பற்றி சர்மிஷ்டைக்கும் எனக்கும் வாக்குவாதம் நேர, அவளென்னை யிவ் வாவியிற் றள்ளி விட்டுப் போய்விட்டாள். தெய்வாதீனமாகத் தாம் வந்து என்னைக் கரையேற்றினீர்.

விரைவுடன் சுக்ராசாரியும் நீலலோசனியும் வருகிறார்கள்.

சு. தெய்வயானை! உன்னை யுயிருடன் காணப் பெற்றேனே! இது என் தவப்பயனே! எப்படித் தப்பினை வாவியினின்றும்?

கா. [ஒருபுறம் யயாதியுடன்] இவர்தான் சுக்ராசாரிபோலும்.

தெ. நானொரு கொடியைப் பிடித்துக்கொண்டு தத்தளித்துக் கொண்டிருந்தேன். இதற்குள் இம்மஹா புருஷன் வந்து என்னைக் கரையேற்றினார். இவர் ஒரு க்ஷணங் கழித்து வந்திருப்பாராயின் நான் கொடியைப் பிடித்திருக்கச் சக்தியின்றி நீரிலமிழ்ந் திறந்திருப்பேன்.

சு. அப்படியா?—ஐயா, நீர் யார்? சந்திர குலத்தரசனாகிய யயாதி யன்றோ?

ய. ஆம், அடியேன் யயாதிதான். இதோ நிற்பவன் என் தோழனாகிய காஞ்சேயன். சுவாமி, நான் தம்மை இன்று காணப் பெற்றது என் தவப்பயனே!

சு. அதிருக்கட்டும்.—நீ ரென்மகளை யெப்படிக் கரையேற்றினீர்? அவளது கரத்தைப் பற்றியோ கரையேற்றினீர்?

ய. தபோநிதியே, தாம் என்னை மன்னிக்கவேண்டும். நானிங்கு அகஸ்மாத்தாய் வந்தபொழுது ஒருபெண் ஓலமிடுங்குரல் என் செவியிற்பட இக்குளத்துள் நோக்கினேன். அப்பொழுது தமது புதல்வி நீரிலழும் அவஸ்தையிலிருக்க, யாரென்றறியாது மனதிரங்கி உடனே குளத்திலிறங்கிக் கரையேற்றினேன் நான்வேறென்ன செய்யக்கூடும்? க்ஷத்திரிய குலத்திற் பிறந்து மடியும் ஓர் உயிரை நான் காப்பாற்றா விட்டால், என்னைப் பெரும்பாபம் தொடருமன்றோ? அச்சமயத்தில் வேறொரு யுக்தியும் தோன்றாமற் போயது.

சு. ஆம், சரிதான். உம்மைக் கடிந்துகொள்வதில் பயனில்லை. நீர் செய்த உதவிக்கு உம்மை நன்கு பாராட்டவேண்டும். இதிருக்கட்டும் —எங்கே அந்த அசுர குலத்துதித்து என் மகளை அவமரியாதை செய்ததுமன்றி, வாவியிற் றள்ளிவிட்டுப்போன அந்த சர்மிஷ்டை? எங்கே அந்தத் துஷ்டையாகிய சர்மிஷ்டை? எங்கே அந்த அரசப்பதராகிய விருஷபர்வா?

சர்மிஷ்டை பின்தொடர விருஷபர்வா வருகிறான்.

வி. [சுக்ராசாரி பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து] எமது குலத்தை யீடேற்ற வந்த குருசிகாமணி! அபயம்! அபயம்!

சு. அடே! அரசப்பதரே! விருஷபர்வா! சீ! எழுந்திரு. உன்னை நான் காலாலுதைத்தலுந் தவறு. நீ அதையும் பெறத்தகாத அற்பன். நீச குலத்தி லுதித்தோனே! எழுந்திரு!

[விருஷபர்வா எழுந்திருக்கிறான்.] உன்னுடைய பெண் சொல்லியதும் செய்ததுந் தெரியுமல்லவா உனக்கு?

வி. குலகுருவே! இப்பிழையை மாத்திரம் பொறுத்தருள வேண்டும். இழிகுலத்திற் பிறந்த எமக்கு என்ன புத்தி யிருக்கப் போகிறது? அதிலும் இவள் அறியாப்பேதை. ஏதோ அறியாமையாற் செய்துவிட்டாள். அசுரகுலத்தைக் காக்கவந்த தெய்வமே! தாம் எமது பிழையைப் பொறுக்கா விட்டால், வேறு யாவர் எமது பிழையைப் பொறுக்கப் போகிறார்கள்? எமது வாழ்வெல்லாம் உம்முடைய அருளினாலன்றோ? தாமே முனிந்தால் பிறகு எமது கதி என்னவாவது? தபோநிதியே! அருள்புரிய வேண்டும்.

சு. மூடாத்மா! எனக்கிப்பொழு திருக்குங்கோபத்தினால் உன்னை நீறாகும்படி சபித்து விடுவேன். ஆயினும் உனது பெண் செய்த குற்றத்திற்கு உன்னைத் தண்டிப்பது நியாயமல்ல வென்று உன்னை விட்டு விட்டேன். உனது மகள் செய்த அபராதத்திற்குத்தக்க தண்டனைவிதிக்கவேண்டும். என்ன சொல்கிறாய்?

வி. சுவாமி! நானென்ன சொல்லுவது? எல்லாமென்னுடைய பாக்கியம். தாம் என்ன தண்டனை வேண்டுமென்றாலும் விதிக்கலாம். என் மகளை இக்ஷணம் சிரச்சேதம் செய்து விடச் சொன்னாலும்—அப்படியே செய்கிறேன்.

சு. அப்படியல்ல.—சர்மிஷ்டை! நீ யென்னுடைய மகளின் குலத்தைப் பழித்தனையல்லவா? அரசன் மகளென்னுங் கர்வமல்லவோ உன்னை யிப்படிப் பிராம்மண குலத்துதித்த என் மகளைப்பழித்து அவளுயிரை மாய்க்க யத்தனிக்கும்படி செய்தது? நீ யெவளைப் பழித்து எவளுயிரைப் போக்கப் பார்த்தனையோ, அவளுடைய பணிவிடை செய்யும் இழிதொழிற் பாங்கியாவாய் இக்ஷணமுதல்!—விருஷபர்வா, என்ன சொல்லுகிறாய்?

வி. சுவாமி, தமது சித்தத்திற்கு மாறுளதோ? தமது சித்தப்படி—பெண்ணே, சர்மிஷ்டை, நீயின்றுமுதல் தெய்வயானையின் பாங்கியாவாய்.—உன் விதி இது, நானென்ன செய்யக்கூடும்?

சு. அடே, விருஷபர்வா, இன்னும் பார், உன்மகள் செய்தகுற்றம் என்னென்ன தீமைகட்கெல்லாம்இடமாயிற்று. இத்துஷ்டையின்தொழிலால், பிராம்மண குலத்துப் பெண்ணாகிய தெய்வயானையின் கரத்தை, க்ஷத்திரிய குலத்திற்பிறந்த இந்த யயாதி மன்னன் தீண்டும்படி நேரிட்டது. இதோ, உனதெதிரில் நிற்கும் யயாதிராஜன், தெய்வயானை வாவியினின்றும் ஓலமிடுவதைக்கேட்டு, அவளது கரத்தைப்பற்றி கரையேற்றினன். இனி என்ன செய்யலாம்? யயாதியின் மீது குற்றமொன்றுமில்லை. ஊழிற் பெருவலி யாவுள? அன்று கசனிட்டசாபம்இன்றுநிறைவேறுங்காலமாயது.—பெண்ணே, தெய்வயானை, நீயிந்த யயாதியை மணம் புரியவேண்டும்.—யயாதி மஹாராஜனே, நீ யெனது மகளை விவாகஞ் செய்து கொள்ளவேண்டும்.

ய. தபோநிதி!—தாம் அறியாததொன்றுமில்லை. தமது வாக்கினின்றும் ஒரு தவறும் வராது—ஆயினும் நானோக்ஷத்திரியன், க்ஷத்திரியன் பிராம்மண குலத்துதித்த பெண்ணை விவாகஞ் செய்து கொள்ளுதல் மனுநீதிக்கு விரோதமாகுமே. சீர்பெற்ற சந்திர குலத் துதித்த நான் இக்குற்றம் செய்வேனாயின் என் குலத்திற் கிழிவு வருமன்றோ?

சு. யயாதி, நீ கூறுவ துண்மையே. ஆயினும் என் மகளுக்கு வியாழபகவானுடைய புத்திரன் கசனிட்ட சாபமொன் றிருக்கிறது. அதென்ன வென்றால், இவள் ஓர் க்ஷத்திரியனை மணம் புரியவேண்டுமென்பதே. ஆகவே விதியின்படி நீ யெனது மகளினுடைய கரத்தைத் தீண்ட நேரிட்டது. எப்பொழுது அவளுடைய கரத்தை நீ தீண்டினையோ அப்பொழுதே அவளுக்குப் பதியாயினை நீ. ஆகவே இது உனது குற்றமன்று. என் சொற்படி என் மகளை மணம்புரி.

கா. [ஒருபுறமாய் யயாதியுடன்] அப்படியே ஆகட்டுமென்று ஏற்றுக் கொள்ளும். இல்லாவிட்டால் முனிவருக்குக் கோபம் வரும்.

ய. சுவாமி,—தமதுத்திரவின்படி.

ச. [தன் தந்தையுடன்] அண்ணு, என்னையும்—இந்த அரசருக்கே—விவாகஞ் செய்து கொடுத்துவிடும். என் தலைவிதிதா னிப்படி முடிந்ததே!—இவ்வளவாவது செய்யும்.

வி. சுவாமி, குலகுருவே, அடியேன் தமக்கொரு விண்ணப்பஞ் செய்கிறேன், கிருபை செய்யவேண்டும். என் பெண்ணினுடைய தலைவிதிதான் இவ்வண்ணம் முடிந்ததே. அதற்காக நான் ஏதும் வருந்தவில்லை. ஆயினும் அவள் மங்கைப் பருவத்தை அடைந்திருக்கிறபடியால் அவளுக்கு விவாகஞ் செய்யாமல் விட்டுவிடுவது நியாயமன்று. தெய்வயானையினுடைய பாங்கியாயினமையால் நான் வேறெங்கு அவளுக்கொரு கணவனைத் தேடுவது? ஆகவே, சர்மிஷ்டையையும் இந்த யயாதி மஹாராஜனுக்கே விவாகஞ்செய்து கொடுத்துவிடும்படி அனுக்கிரகிக்க வேண்டும். சர்மிஷ்டை தெய்வயானைக்கு எப்பொழுதும் பணிசெய்யவும் இது மிகவும் அனுகூலமாயிருக்கும். சுவாமி, தாம் எப்படியாவது இந்த வேண்டுகோளுக் கிரங்க வேண்டும்.

சு. விருஷபர்வா, நீ கூறுவதும் ஒரு விதத்தில் நியாயமாகத்தான் தோன்றுகிறது. தெய்வயானை, எப்படியும் உன்னுடன் கூடிப்பலநாள் விளையாடிய தோழியன்றே சர்மிஷ்டை? நாம் அசுர குலகுருவாயிருந்து அக்குலத்திற்குக் கெடுதி செய்வது நியாயமன்று. ஆகவே இச்சர்மிஷ்டையையும் யயாதிக்கு விவாகஞ் செய்துகொடுக்கிறேன். உன்னிஷ்டமெப்படி?

தெ. ஆம், அப்படியே செய்யும். அவள் எனக்குக் குற்றஞ் செய்தபோதிலும் எனக்குப் பரிதாபமாகத்தானிருக்கிறது.

சு. விருஷபர்வா, பார்த்தனையா. பிராம்மணப் பெண்ணின் குணத்தையும் அசுரகுலப் பெண்ணின்குணத்தையும்?—யயாதி ராஜனே, நீ இவ்விருஷபர்வாவின் மகளாகிய சர்மிஷ்டையையும் மணம் புரிவாய். ஆயினும் உனக்கொன்று கூறுகிறேன் இப்பொழுதே, ஞாபகமிருக்கட்டும். நீ ஒரு பிராம்மண குலப் பெண்ணைச் சேர்ந்தபின் வேறொரு ஸ்திரீயைச் சேர்வது தவறு. ஆகவே இந்த சர்மிஷ்டைக்குப் புருஷபோகமொன்று தவிர மற்றெல்லாப் போகங்களையும் அளிப்பாய். நான் கூறியதிற் றவறுவாயாயின் பிறகு உனக்குப் பெருங்கெடுதி நேரிடும்.

ர. தவச்சிரேஷ்டரே;—தமது சித்தப்படி. ஆயினும்—

வி. சுவாமி, எனதரண்மனையிலேயே இவ்விவாகத்தைத் தாம்நிறைவேற்றவேண்டிக்கொள்கிறேன். நாமெல்லோரும் புறப்பட்டுப் போய், சீக்கிரம் யாவும் சித்தஞ் செய்வோம்.—யயாதி ராஜனே, தாம் எனதரண்மனைக்குச் சீக்கிரம் எழுந்தருள வேண்டும். நாங்கள் விடைபெற்றுக் கொள்கிறோம்.

[யயாதி காஞ்சேயன், தவிர மற்றவர் போகிறார்கள்]

கா. அரசே, ஏது, தாம் துறவற மார்க்கத்தைப் புகழப் போய்இரண்டுமனைவியர்கள் கிடைத்தாப்போலிருக்கிறது! ஆயினும் இதிலொரு சங்கடம் முளைத்ததே பார்த்தீரா ?

ய. காஞ்சேயா, உனக்கென்னவோ பரிகாசமாயிருக்கிறது. எனக்கின்னது செய்கிறதென்று தோற்றவில்லை. இதென்ன சங்கடமாயிருக்கிறது? மஹாரிஷி கூறியது நிறைவேறி விடும்போலிருக்கிறது! நான் இப்பொழுது சுக்ராசாரியினுடைய மகளை விவாகஞ் செய்துகொள்ள மாட்டேனென்று மறுப்பேனாயின் அவருக்குக் கோபம் பிறக்கும். விருஷபர்வாவின் மகளை வெறுக்கவோ—என் மன மெழவில்லை.—ஆஹா! தோழனே, என்ன ரூபவதி! என்ன கண்கள்! அவள் என்னை ஒருதரம் நோக்கிய பொழுதே என துயிரைப் பாசங்கட்டி வலிப்பதுபோ லிருந்ததே! ஆயினும் இதென்ன துர்ப்பாக்கியம், நான் அவளைத் தீண்டலாகாதாமே! ஏது மஹாரிஷி கூறியது உண்மையாய் முடியும்போலிருக்கிறது! நானென்ன செய்வது இச்சங்கடத்திற்கு?

கா. அரசே, தாம் இனி யோசித்துப் பயனென்ன? வருங் காரியம் வந்துதான் தீரும். தாம் ஏற்றுக்கொண்டபின் பின்வாங்குவது தர்மமல்ல. நம்மாலியன்ற அளவு தீங்குவராமற் காத்துக்கொள்ளுவோம். மஹாரிஷி கூறியபடி ஒரு தீங்கும் நேரிடாமலிருக்க வேண்டுமென்று கோருவோம்.

ய. காஞ்சேயா, நீ கூறுவதில் எனக்கு நம்பிக்கையில்லை. மஹாரிஷிகூறியது எப்படியும் நேர்ந்தேதீரும்என்று எனக்கு ஏதோவொன்று கூறுகிறது. ஆயினும் நானென்ன செய்வேன்? வந்தால் பொறுத்தே தீரவேண்டும். போவோம். வா. [இருவரும் போகிறார்கள்.]

## மூன்றாவது அங்கம்

இடம்:—அரண்மனை நந்தவனம். காலம்:—சந்திரனுேடுகூடிய இரவு.
சர்மிஷ்டை, உட்கார்ந்திருக்கிறாள்.

ச. இன்று நான் எழுந்த வேளை நல்ல வேளையாயிருக்க வேண்டும்! எனதெண்ணம் எப்படியுங் கைகூடு மென்று ஏதோ ஒன்று எனக்குள் சொல்லுகிறது —அப்பொழுதே போன நமது விதூஷகன் ஏன் இன்னும் வரவில்லை. எப்படியாவது அவன் சந்தோஷமான உத்திரங் கொண்டு வருவானாக! சீக்கிரம் வருவதாய்க்கூறிச் சென்ற தோழியும் இன்னும் வரவில்லையே.—எனதெண்ணம் சீக்கிரம் நிறைவேறாவிடின் எனதுயிர் துறப்பேனென்பது திண்ணம். தெய்வயானைக்குப் பணிவிடைப் பெண்ணாக வேண்டி வந்தபொழுதே எனதுயிரை மாய்த்துக் கொண்டிருப்பேன். ஆயினும் எனது பிராணநாதர் மீது கொண்டகாதலானது என்னை இதுவரையில் உயிருடனிருக்கச் செய்தது —என் பிராணநாதர்!— ஏன் நான் அவரைப் பிராணநாதரென்று அழைக்கலாகாது? எது எப்படி யிருந்தபோதிலும் என்னை அக்நி சாக்ஷியாக விவாகஞ் செய்துகொண்டது உண்மைதானே? அவர் என்னைக் கண்ணெடுத்துப் பாராவிட்டாலும், அவர் என் பர்த்தா, நான் அவருடைய பத்னிதான் பாவம்! அவர் என்ன செய்வார்? அந்த சுக்ராசாரிக்கு அன்று வாக்களித்தபடி அவர் நடக்க வேண்டியதாயிற்று!—தர்மத்தினுல் கட்டுண்டிருக்கிறார். அவரை நொந்து பயனென்ன? இவ்வளவுதான் நான் கொடுத்து வைத்தது; கொடுத்து வைத்தவள் தெய்வயானை, அவள் அனுபவிக்கிறாள். அவளைப்பார்த்து கொடுத்துவைக்காத பாவி நான் பொறாமைப்பட்டென்ன பயன்? ஆயினும் இந்தத் தெய்வயானைக்கு என்மீது சற்றும் இரக்கமில்லாமற் போயிற்றே! நானும் அவளைப்போன்ற ஒரு பெண் தானே? நானும் மஹாராஜாவுக்கு அவளைப்போல் வாழ்க்கைப்பட்டவள்தானே. அவளைப்போல எனக்கும் எனது பிராணநாதருடன் சுகமனுபவிக்க விருப்ப மிருக்குமென்று கனவிலும் நினையாளோ? சிறுவயது முதல் தன்னுடன் ஒன்றாய்க்கூடி விளையாடினவள் நான் என்பதை மறந்தாளோ? தன்னுடைய பிதாதான் கொடுமையான கட்டளையிட்ட போதிலும், இவளாவது நமதரசன் மகளென்று மனதிரங்கி மஹாராஜாவை நான் கண்ணாரக் காண்பதற்காவது ஒருமுறை அனுப்பாளோ என்னிடம்?

நான் குடத்திலிட்ட விளக்கைப் போல குலைந்து வருகிறேனே! நான் அசுரகுலத் தரசனாகிய விருஷ பர்வாவின் மகளாகப் பிறந்தும், சந்திரகுல திலகராகிய யயாதிராஜனை மணந்தும் இந்தத் துர்ப்பாக்கிய ஸ்திதியிலிருக்கிறேனே! ஈசனே! ஈசனே!—

ஒரு தோழி வருகிருள்.

தோழி, என்ன சமாசாரம்? இவ்வளவு நேரமென்ன? சீக்கிரம் சொல்.

**தோ.** அம்மா, இனி நீர் கவலைப்படவேண்டாம். நான் போன காரியத்தை முடித்துக்கொண்டு திரும்பிவந்தேன்.

**ச.** ஆனல் இப்பொழுது மஹாராஜா இங்கு வருவாரோ?

**தோ.** சந்தேகமில்லை. எப்படியாவது போக்குச் சொல்லி மஹாராஜாவை யிங்கு அழைத்து வருவதாக ஒப்புக்கொண்டார் என் கணவர்.

**ச.** எப்பொழுது வருவார்?

**தோ.** இன்னும் அரை நாழிகைக்குள் வருவார். அம்மா இனியாவது உமது கவலை யெல்லாந் தீர்ந்திரும். உமது கோரிக்கை நிறைவேறிவிட்டது. இனி யுமக்கென்ன குறை?

**ச.** தோழி, நன்றாகச் சொன்னாய்! அஷ்டதரித்திரனைப் பார்த்து குபேர னென்பதுபோல எனக்கென்ன குறையென்று சொல்லுகிறாயே! ஐயோ! என்னைப் போன்ற துர்ப்பாக்கியசாலிகளும் இவ்வுலகி லிருக்கிறாளோ?

**தோ.** அம்மா, இதை நான்முன்பே கேட்கவேண்டுமென்றிருந்தேன். உமக்கு உண்மையில் என்ன குறை? புருஷபோகமில்லாத குறையொன்று தவிர வேறென்ன இருக்கிறது? அவ்விஷயத்திற் றவிர மஹாராஜா உம்மையும் தெய்வயானைத்தேவியையும் சமமாகத்தானே பார்த்துவருகிறார்? அவளுக்கிருக்கிறது போலவே உமக்கும் ஆடை ஆபரணங்கள் மாளிகை முதலியனவெல்லாம் கொடுத்திருக்கிறார். இதற்காக இவ்வளவு தாம் வருத்தப் படுவானேன்?

**ச.** சீ! நீ யென்ன ஒன்றுந் தெரியாதவள்போற் பேசுகிறாயே? எனக்கிவைகளெல்லாம் இருந்தும் புருஷ போகமின்றி என்ன பயன்? அது இருக்குமாயின் இவைகளை யெல்லாந் திரணமாகப் பாவிப்பேனே.

எனது பிராணநாதர் பார்த்து சந்தோஷப் படுவதற் கன்றி இவ்வாடையாபரணங்கள் எல்லாம் எனக் கென்னத்திற்கு? அவர் என்னைக் கண்ணெடுத் தும் பாராதிருக்கும் பொழுது இச்செல்வங்களின் மீதெல்லாம் என் மனம் எப்படிச் செல்லும்?

**தோ.** நாம் மஹாராஜாவையும் கடிந்துகொள்ளக் கூடாது. அவர் என்ன செய்வார்? பாவம்! அவர் சுக்ராசாரி யின் கட்டளைப்படி நடக்கவேண்டி யிருக்கிறதே!

**ச.** சுக்ராச்சாரி என்ன கட்டளை யிட்டார்? என்னைக் கண்ணெடுத்துப்பார்த்து என்னுடன் பேசவு மாகா தென்று கட்டளை யிட்டாரோ?

**தோ.** ஆமாம் அம்மா, பேச ஆரம்பித்தால் பிறகு தொந் திரவுக்கிடமாகுமென்று உம்மைப் பாராதிருக்கின் றார்போற் றேன்றுகிறது. அதிலும் தாமோ அதிக ரூபவதி.—அதிருக்கட்டும்—இக்கவலையும் சீக்கிரம் ஒழியப்போகிறது. நீர்தான் அவரைப் பார்க்கப் போகின்றீரே நேரில், சீக்கிரம் உமதரண்மனைக் குச்சென்று அலங்காரஞ் செய்துகொள்ளும், மஹா ராஜா வரும் காலமாயிற்று.

**ச.** நான் பார்த்தாலும் இப்பொழுதாவது என்னுடன் வார்த்தை யாடுகிறாரோ என்னவோ? எல்லாவற் றிற்கும் சுவாமி யிருக்கிறார்! தோழி, வா நாம் போவோம். இவ்விடத்திற்றானே மஹாராஜா வரு வார், சந்தேகமில்லையே?

**தோ.** சந்தேகமில்லை, வாரும் போவோம். [போகிறார்கள்]

சற்று தூரத்தில் யயாதியும் காஞ்சேயனும், வருகிறார்கள்.

**கா.** அரசே, இரவில் தாம் நித்திரையின்றி கஷ்டப்படு வதினும், தினம் நீர் போஜனங் கொண்டவுடன் இவ்விடத்தில் வந்து சற்றுலாவிச்சென்றால் தேகத் திற்கும் ஆரோக்கியமா யிருக்கும், நித்திரையும் விரைவில் வரும். இப்பூஞ்சோலை மனத்திற்கு எவ்வ ளவு ஆரோக்கியத்தைத் தருகிறது பார்த்தீரா? அதி லும் இப்பொழுது வசந்த காலம்.

**ய.** நண்பனே, ஆம், நீ கூறுவதுண்மையே. மெல்லென வீசும் தென்றல் இங்குள்ள மலர்களின் கந்தத்தைப் பரவச் செய்வதும், ஒள்ளிய சந்திரிகை உறுக்கி ஓட விட்ட பத்தரைமாற்றுத் தங்கம்போல் அத்தடாகத் தில் பிரகாசிப்பதும், மிகுந்த இன்பத்தைத்தருகின்

றன; ஆயினும் இவைகளை யெல்லாம் பார்க்கும் பொழுது எனக்குச் சந்தோஷமா யிருந்தபோதி லும், ஓர் புறம் ஏதோ ஓர்வித வருத்தமும் இருக்கி றது. அது யாது காரணம் பற்றியோ அறிகிலேன்.

கா. ராஜபத்னி அருகிலில்லை யென்றோ ?— அரசே, தெய்வயானைத்தேவி அந்தப்புறத்தில் தம்மைக் காணோமென்று தேடமாட்டார்களோ ?

ய. இல்லை, அவள் உறங்கிவிட்டாள், நான் வரும் போது பார்த்து விட்டுத்தான் வந்தேன்.

கா. சரிதான்.—என்ன வருத்த முண்டாகிறதெனக் கூறினீர் ?

ய. அதை வருத்தமென்றுங் கூறலாகாது. ஓர் வித சந்தோஷத்தைத் தரும் வருத்தமா யிருக்கிறது. இந்த சந்தோஷத்தை நாம் மறுபடியும் அனுபவிக் கப் போகிறோமோ என்னவோ என்னும் சந்தேக மே அவ்வருத்தத்திற்குக் காரணமா யிருக்கிறதோ, அல்லது வேறு யாது காரணமோ அறிகிலேன்.

கா. எக்காரணமா யிருந்தாலும் இருக்கட்டும். இப் பொழுது நாம் வேடிக்கையாய்க் காலங் கழிப்பதை விட்டு விட்டு இவைகளை யெல்லாம் யோசிப்பா னேன் ? இப்படிப்பட்ட இளவேனிலை நாம் வினோ தமா யனுபவியாதது பெரிய தவறும்.

[இருவரும் உட்காருகிறார்கள்,]

ய. காஞ்சேயா, ஒருவனுக்கு எப்படிப்பட்ட மனக் கவலை யிருந்தபோதிலும் அது சங்கீதத்தினால் நீங்கு மென்று ஆன்றோர் கூறியுள்ளார். இச்சமயத்தில் உன் கீதத்தினால் எனது செவி சற்றின்ப மடையட் டும். [காஞ்சேயன் சற்று பாடுகின்றான்] காஞ்சேயா, நீ பாடிய தன்மையை நோக்குங்கால் உண்மையில் நீ யெதையோ கருதி இவ்வாறு பாடியதுபோ லிருக்கி றது.

கா. இல்லை, மஹாராஜா. வேடிக்கையாகப் பாடினேன். ஒன்றையும் எண்ணினவ னன்று.

ய. காஞ்சேயா, சங்கீதத்தினால் உண்டாம் மகிழ்ச்சியே மகிழ்ச்சி! தேகத்தை யெல்லாம் பரவசமுறச் செய் கிறது அதுவொன்றே! பாடுகிறவனுக்கும் இன்பத் தைத் தருகிறது, கேட்போருக்கும் இன்பத்தைத் தருகிறது ! சங்கீதத்தினால் உருகாத ஜென்மம் என்ன ஜென்மம்?—காஞ்சேயா, அதோ, யாரோ

தூரத்திற் பாடுகிறாற்போ லிருக்கிறது. காதுக் கெவ்வளவு இனிப்பா யிருக்கிறது! இக்காலத்தில் அரண்மனையருகில் யார் பாடப்போகிறார்கள் ?

கா. இதோ போய்ப்பார்த்து வருகிறேன் [தனக்குள்] இதற்காகத்தானே ஒரு போக்கு தேடிக்கொண் டிருந்தேன். [போகிறான்]

ய. நடுநிசியில் இங்கு யார் இவ்வளவு இனிமையாய்ப் பாடக் கூடும்? இந்தப்புறம் இருந்துதான் குரல் வருகிறது.—ஓ! இது சன்மிஷ்டையின் மாளிகையல்லவா? சந்தேகமில்லை. அப்பெண்ணன்றி யார் இவ்வளவு இனிமையாகப் பாடப்போகிறார்கள்? அப்பாட்டானது என் மனத்தை யெல்லாம் கவர்கிறதே! சீ! என்னைப்போலும் துர்ப்பாக்கியசாலிகள் இந்நிலவுலகின் கண் ஒருவரு மிரார். கையிலிருக்கும் மதுரமான கனியை ருசிக்கச் சக்தியற்றவனாயிருக்கிறேனே! இவ்வழகியை மனைவியென்று கூப்பிடும்படியான ஓர் பேற்றை நான் பெற்றிருந்தும் அவளுடன் வாழ நான் கொடுத்துவைக்காம லிருக்கிறேன். சீ! என்ன தப்பிதம் செய்தேன்! அன்றைத்தினம் ஏன் சுக்ராசாரியருடைய கட்டளைக்குட் பட்டேன்? என்னுடைய துரதிர்ஷ்டமே துரதிர்ஷ்டம்! தெய்வயானை அழகிலும் புத்தியிலும் சிறந்தவளாயிருந்தாலும், அன்று சன்மிஷ்டையைக் கண்டது முதல் சன்மிஷ்டையின்மீதே என் மனம் நாடுகிறது. ஐயோ, பாவம்! என்னை மணந்தும் சன்மிஷ்டை என்ன சுகத்தை யனுபவித்தாள்? அவளைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் எனக்கு மனோதிடமில்லை; எங்கு அவளது பேரழகை இன்னொரு முறை பார்ப்பேனாயின் சுக்ரபகவானுக்கு நான் கூறிய மொழியினின்றும் தவறும்படி நேரிடுகிறதோ என்று அவளைப் பார்ப்பது மில்லை. நான் என்ன செய்வேன்! என் வாக்கால் கட்டுண் டிருக்கிறேன். "கிட்டாதாயின் வெட்டென மற" என்று இவ்வாசையை நான் இப்பொழுதே அடக்கி விடவேண்டும். இக்கவலையினா லன்றோ எனக்கு இரவில் நித்திரையில்லாமல் இருக்கிறது? முன் ஜென்மத்தில் ஸ்திரீ புருஷர்களை எப்படிப் பிரித்தேனோ, அதன் பயனை இப்பொழுது அனுபவிக்கிறேன். "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந் துறும்!" ஈசனே! ஈசனே!—

[ஆசனத்தின் மீது சயனிக்கிறான்.]

[கந்தம், களபம், புஷ்பம், தாம்பூலத்துடன் சன்மிஷ்டை வருகிறாள்.]

ச. என் னிடது தோளும் கண்ணும் துடிப்பானேன்?—மனமே, அதைரியப்படாதே.—என்ன, இங்கு ஒரு அரவத்தையுங் காணேம். ஒருவேளை என் பிராணநாதர் அரண்மனைக்குத் திரும்பிப் போய்விட்டாரோ? இல்லை, இல்லை. அதோ, அந்த சந்திர காந்தக் கல்லின்மீது சயனித்துக்கொண் டிருக்கிறார். நித்திரை செய்கிறாரா என்ன? சற்று மெல்ல அருகிற் சென்று பார்ப்போம். [சமீபத்திற் சென்று] அயர்ந்த நித்திரையி லிருக்கிறார். இன்றுதான் என் தபோ பலன் நிறைவேறியது.—பிராணநாதா, உமது அருகில் நின்று உமது பேரழகை உற்றுப் பார்த்து பேரானந்த மடையப் பெற்றேனே! தெய்வயானை செய்த பாக்கியமே பாக்கியம்! இப்பொழுது தெரிகிறது, உம்மை அவள் ஒரு க்ஷணமேனும் விட்டுப் பிரியாததற்குக் காரணம். உமது அழகைக் கண்டு ஆடவரும் பெண்மை விரும்புவாரெனின், உமது அழகை நானோ உரைக்கத் தக்கவள்? ரதியே கண்டு மயங்குவாளெனில் என் மன நிலைமையை எவ்வா றுரைப்பேன்? ஆஹா! இச்சுந்தர வீரனைப்புருஷனைகப்பெற்றும், என்ன துர்ப்பாக்கிய ஸ்திதியி லிருக்கிறேன் நான்! கால தாமதஞ் செய்யலாகாது. எழுப்பவா என் பிராணநாதரை? எழுப்புவேனாயின் கண்ணெடுத்துப்பாராமலும் பேசாமலும் அந்தப்புறத்திற்குப் போய்விட்டால் என்ன செய்கிறது? காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ள வேண்டும். இவரது செவ்விய அதரத்திற்குஓர்முத்த மிடுகிறேன். [மிருதுவாய் முத்தமிட்டு] இன்னும் நித்திரையினின்றும் எழுந்திருக்கவில்லை. ஐயோ! எப்பொழுதும் இவர் இப்படியே உறங்கிக்கொண் டிருப்பாராயின், நான் எப்பொழுதும் இவருக்கு முத்தம் கொடுத்துக் கொண்டே யிருப்பேனே! அப்படியாவது எனது ஆசை சற்று தீரும். எப்படியும் இவரை எழுப்பவேண்டும். இத்தருணம் தவறினல் மறுபடி நமக்கு வேறொரு தருணம் வாய்க்குமோ என்னவோ? ஆயினும் ஒரு யுக்தி தோற்றுகிறது. என் மோதிரத்தை இவர் கரத்தி லணிந்து இவர் கணையாழியை என் கரத்தி லணிந்து கொள்கிறேன் முன்பு.

[மோதிரத்தை மாற்றிக்கொண்டு முத்தங்கொடுத்து, சற்று தூரத்தில் நிற்கிறாள்.]

ய. [நித்திரைநீங்கி எழுந்து உட்கார்ந்து] என்ன! உறங்கிவிட்டேன்!—அது யார்? [சன்மிஷ்டையைக் கண்டு எழுந்திருக்கிறான்.]

ச. பிராண நாதா—

ய. [தனக்குள்] பிராண நாதா!

ச. ஏன், நான் தம்மைப் பிராணநாதா என்றழைக்கலாகாதோ? நீர் கண்ணெடுத்துப்பார்த்து என்னுடன் பேசாவிட்டாலும் என் பிராணநாதர் அல்லாமற் போவீரோ? நீர் என்னை மணந்ததும் உண்மையல்லவோ? அதையாவது சொல்லும், வாயைத்திறந்து.

ய. [கீழே பார்த்த வண்ணம்] இந்த வேளையில் நீ யிங்கே வந்த காரணமென்ன?

ச. பிராணநாதா, நீர் தலை குனிந்து கீழேயிருக்கும் மண்ணைப் பார்த்துப் பேசுகிறீரே. நான் அம்மண்ணினுங் கீழாய்விட்டேனே? அதைக் கேட்கலாமென்றுதான்வந்தேன். என்ன, சும்மா இருக்கிறீர்?

ய. சுக்ராசாரியார் கூறியதை மறந்தனையோ?

ச. அதைத்தான் கேட்கவந்தேன். சுக்ராசாரியர் என்னுடன் சம்பந்தப்பட லாகாதென்று கூறினரேயொழிய பேசவுங் கூடாதென்று மொழிந்தனரா? என்னைநீர் அக்நி சாக்ஷியாக மணந்தீரா அல்லவா? தன் சொந்த மனையாளைக் கண்ணெடுத்தும் பாராதிருப்பது தர்மமா? இம்மூன்று கேள்விகளுக்கும் உத்திர மளித்துப் பிறகு தாம் செல்லும். தம்மைத் தர்ம பூபதி யென்று வியாழ பகவானே புகழ்ந்திருக்கிறார்! இதற்குத்திரம் சொல்லிப் பிறகு போம்.—

ய. சன்மிஷ்டை, நான் சொல்வதைக் கேள்.—

ச. பிராணநாதா, என்னுடைய பெயரைத் தமது வாக்கால் சொல்லக் கேட்டேனே! இதுவே போதும் எனக்கு.

ய. நான் உன்னை விவாகஞ் செய்துகொண்டது உண்மையே, ஆயினும் அக்காலத்தில் சுக்ரபகவானிடம், உனக்குப்புருஷபோகமன்றி மற்றெல்லாச்செல்வங்களையுங் கொடுப்பதாக வாக்களித்தேன் என்பது நீ யறிந்த விஷயமே. நான் எனது வாக்கால் கட்டுண்டிருக்கிறேன். அதையன்றி உனக்கு நான் நடத்தி வருவதில் ஏதாவது குறையிருந்தால் கூறு. இக்ஷணமே அதைத் தீர்க்கிறேன்.

ச. பிராணநாதா, சந்திரகுல திலகராகிய உமக்கு நான் கூறத்தக்க தொன்றுமில்லை. ஆயினும் ஒன்றுகூறு கிறேன். எனக்கு உமது சுகமின்றி மற்றச் செல்வங்களெல்லாம் என்னத்திற்கு? ஸ்திரீயாய்ப் பிறந்தவர்களுக்குப் புருஷபோகமே முக்கியம். அதுவின்றி மற்றச் செல்வங்களால் என்ன பயன்? முகமின்றி உடல் என்னத்திற்கு?

ய. பெண்ணே, அதற்கு நான் என்ன செய்யலாம்? அதையின்றி வேறு குறையிருந்தாற் சொல்.

ச. வேறோர் குறையும் வேண்டுமா? தெய்வயானையைப் பார்க்கும் பொழுது 'கண்ணே!' யென்றழைக்கிற வாய், என்னைப்பார்க்குமிடத்து பெண்ணே யென்றழைக்கிறதே! நானும் அவளைப்போல் உமக்கொரு பத்தினி யன்றோ?

ய. ஐயோ! சன்மிஷ்டை, எனது மனநிலைமை உனக்குத் தெரியாது. தெரியுமாயின் இவ்வாறு கூறமாட்டாய். நான் என்ன செய்வேன்?

ச. பிராணநாதா, இப்படி உட்காரும் சற்று. அதுவும் செய்யலாகாது, சுக்ராசாரி அதுவுங் கூடாதென்றாரோ? [யயாதி உட்காருகிறான்]

ய. சன்மிஷ்மிடை, சுக்ராசாரி கூறிய ஒரு விஷயந்தவிர மற்றைய விஷயங்களில் உங்களிருவரையும் ஒன்றாகப் பாவிக்கின்றேன்.

ச. ஏதோ பார்ப்போம். [ஒரு வெற்றிலைச் சுருளைத்தருகிறாள்.]

ய. இதென்ன இது? சன்மிஷ்டை, எனக்கிதுவேண்டாம்.

ச. பிராணநாதா, இதுதானோ தெய்வயானையையும்என்னையும் மற்றெல்லா விஷயங்களிலும் ஒன்றாய்ப் பாவிப்பது? அவள் கொடுத்திருப்பா ளாயின் வெறுத்திருப்பீரா? உம்முடைய தர்மம்இது தானோ? அவளுக்கு விருப்பும் எனக்கு வெறுப்பும் சமமாகப் பகிர்ந்து கொடுக்கிறாற்போ லிருக்கிறது! பிராணநாத, நான்தான் குற்றம் செய்தேன்; இந்த வெற்றிலை, வெறும் இலை! என்ன குற்றம் செய்தது?

ய. கண்ணே, என் மன நிலைமை உனக்குத் தெரியாது. உன்னைக் கண்டதுமுதல் உன்மீது நான் காதல் கொண்டேனாகிலும், சத்தியத்திற் குட்பட்டு உன்னைக் கண்ணெடுத்துப் பாராமலும் இருக்கவேண்டி வந்தது.

ச. பிராணநாதா, இன்றேஎன்ஜென்மம் சபலமாயது. நீர் அவ்வளவு கூறினீரே அது போதுமெனக்கு.

ய. ஆயினும், கண்மணி, ஒன்றுமாத்திரம் உன் மனதில் உறுதியாய் ஞாபகமிருக்கட்டும். நான் ஒரு வாக்கு தத்தஞ் செய்வேனாயின் மும்மூர்த்திகள்வந்து வேண்டியபோதிலும்அதினின்றும்பிறழேன். ஆகவேஅக் குறையொன்றையின்றி வேறு எக்குறை யிருந்த போதிலும் அதை நான் தீர்க்கச் சித்தமா யிருக்கிறேன். இப்பொழுது நெடுநேரமாயிற்று, நான் அரண்மனைக்குப் போகிறேன். இங்கு நம்மை யாராவது கண்டால் சந்தேகங் கொள்வார்கள்.

ச. இன்னும் சற்றிருந்து போகலாகாதா?

ய. இல்லை, நான்போகவேண்டும், மன்னிப்பாய். ஏதாவது பேச வேண்டுமென்றால் இன்னொருவேளை பேசிக்கொள்வோம்.

ச. பிராணநாதா, அவசரமா யிருந்தால் நான் தடை சொல்லவில்லை — என்னுடைய கணையாழியைக் கொடுத்து விட்டுப்போம்.

ய. உன்னுடைய கணையாழி! [தன் கை விரல்களைப் பார்த்து] ஆ! இதுஎன் விரலில் எப்படி வந்தது? என் மோதிரம் எங்கே? என் விரலிலிருந்த மோதிரத்தை எப்படி யெடுத்தாய் நீ?

ச. பிராணநாதா, நீர் என்னைத்தீண்ட லாகாதென்று சுக்ராசாரியார் கூறினாரேயொழிய நான் உம்மைத் தீண்டலாகாதென்று அவர் கூறவில்லையே. நீர் உறங்கும் பொழுது இவைகளை மாற்றி யணிந்து பார்த்தேன். கோபித்துக் கொள்ளாதீர்.

ய. இல்லை, என் கணையாழியைக் கொடு இப்படி.

ச. ஐயோ! இதை என் விரலை விட்டுக் கழற்ற முடியவில்லையே. நாதா, இதைச் சற்று கழற்றும்.

ய. [மோதிரத்தைக் கழற்றி யெடுத்துக்கொண்டு] நேரமாய் விட்டது!

ச. பிராணநாதா, இப்பொழு தென்னை யெப்படித் தீண்டினீர்?

ய. சீ! மறந்தேன்.—சன்மிஷ்டை, இதோ உனது மோதிரம்.

ச. பிராணநாதா, இச்சமயத்தில் என்னைத் தனியாக விட்டுச் செல்வது உமக்கு நியாயமா? பலநாட்கள் வீணிற் கழிந்தனவே! என திளமையும் வீணிற் பறக்கிறதே! இந்த இள வேனிலில் உம்மைப் பிரிந்து நான் எப்படி உயிர்வாழ்வேன்? சித்தஜன் கணையினின்றும் என்னைக்காக்கமாட்டீரா? இத்தென்

றதும், அன்றியும், நிசியும், சசியும் என்னை வாட்டு கின்றனவே! பிராணநாதா, நீர் சும்மா இருப்பது தர்மமா? இது உமக்கு அடுக்குமா? பிராணநாதா, எப்படியாவது என் மனோரதத்தை நீர் நிறை வேற்றி விட்டுத்தான் போக வேண்டும்.

ய. சன்மிஷ்டை, பார்த்தனையா? இதற்காகவேதான் நான் அப்பொழுதே ஜாக்கிரதையாக இருந்தது.

ச. பிராணநாதா, என்னுயிர் போய்விடும், நீர் வீணிற் சென்றால். பிறகு அப்பாபம் யாரைத்தொடரும், யோசித்துப்பாரும்.—

ய. அப்பா! என்னை ஆயிரம் ஸ்திரீ ஹத்திகள் தொடர்ந் தாலும் பொறுப்பேன். என் வாக்கினின்றுந் தவறேன்.

ச. ஆனால் உமதிஷ்டம். பிராணநாதா, தம்மை விடை பெற்றுச் செல்கிறேன். [பாதத்தில் வீழ்ந்து வணங்கி எழுந் திருந்து] பிராணநாதா, எனக்கொரு வரந் தர வேண்டும்.

ய. சுக்ராசாரி கூறியது தவிர வேறென்ன வேண்டு மென்றாலுங் கேள், தருகிறேன்—

ச. பிராணநாதா-எனக்குப் புத்திரபாக்கியம் அளியும். தெய்வயானை புத்திர பாக்கியம் பெற்றதுபோல எனக்குப் புத்திர பாக்கியம் அளியும்.

ய. சீ! என்ன மதிமோசம் போனேன்! [ஆசனத்தில் வீழ்கிறான்.]

ச. பிராணநாதா, மும்மூர்த்திகள் வந்து வேண்டியபோ திலும், ஆயிரம் ஸ்திரீ ஹத்திகள் நேர்ந்தபோதிலும் தாம் கூறிய வாக்கினின்றுந் தவறமாட்டேனென் றீரே, புத்திரபாக்கியம் அளியுமெனக்கு.

ய. சன்மிஷ்டை, சுக்ராசாரியருக்கு நான் கூறிய வாக் கினின்றுந் தவறாது நீ கேட்பதை நான் எப்படித் தருவது?

ச. அந்த விஷயத்தைப்பற்றி யோசிக்கவேண்டிய கடமை எனக்கில்லை. எனக்கு புத்திர பாக்கியம் அளியும். நீர் கூறிய மொழியினின்றுந் தவறினால் உமது முன்னிலையில் எனது உயிரை இப்பொழுதே மாய்த்துக்கொள்ளுவேன்.

ய. [தனக்குள்] மஹரிஷியின் வார்த்தை மெய்க்குங்காலம் வந்துவிட்டது. யார் விதி யாரை விட்டது? இனி நாம் என்ன செய்யலாம்?—கண்ணே, உனது புத்திக்கு மெச்சினேன்!

[இருவரும் அங்கிருக்கும் ஓர் லதாக்கிருஹத்துட் போகிறார்கள்.]

## நான்காவது அங்கம்.

இடம்—தெய்வயானையின் அந்தப்புரம் காலம்—பகல்.

தெய்வயானை உட்கார்ந்திருக்கிருள்.

தே. என்ன ஆச்சரியம்! இதனுண்மையையெப்படியாவது அறியவேண்டும். நீலலோசனி தன் கண்களால் நேராகக் கண்டதாகக் கூறுகிருள். ஆதலால் இது பொய்யாயிராது. இதன் பொருட்டுத்தான் சன்மிஷ்டை ஏழெட்டு மாதங்களாக தேகசவுக்கியமில்லையென்று சொல்லி என்னைப் பாராதிருந்தாள் போலும். அக்குழந்தை சன்மிஷ்டைக்குப் பிறந்தது என்பதற்குச் சந்தேகமில்லை. அதன் பிதா மஹாராஜாவேயன்றி யாரா யிருக்கக்கூடும்? சன்மிஷ்டையோ கற்புடையவள். ஆகிலும் என்னுடைய பிராணநாதர் பிதாவுக்கு அளித்த வாக்கினின்றும் எப்படித் தவறியிருப்பார்? நாம் நேரில் வரவழைத்துக் கேட்கவேண்டும்.

பப்பரன் வருகிருன்.

ப. அம்மணி, நமஸ்காரம்.

தே. பப்பரா, நமது சன்மிஷ்டைக்குப் பிறந்திருக்குங் குழந்தை—என்ன, அசங்கியமாக இருக்கிறதாமே, நீ நேரிற்கண்டனையா?

ப. அம்மணி, அதையேன் கேட்கிறீர்கள்? அவலக்ஷணமென்ருல் அதற்கே தகும்—அதிருக்கட்டும் அம்மணி, நேற்றைத் தினம் அந்தக் கவிராயர் வந்ததாகச் சொன்னேனே, அவர்—

தே. கவிராயர் சமாசாரம் அப்புறம் விசாரிப்போம். என்ன பப்பரா, பொய் பேசுகிருய்? அக்குழந்தை நமது மஹாராஜாவைப்போலவே யிருக்கிறது, மிகவும் அழகாக, என்கிருர்களே பார்த்தவர்கள்.

ப. ஆம், சந்தேகமென்ன? யார் இல்லை யென்றது? மஹாராஜாவும் அக்குழந்தையும் ஒரே அச்சில் வார்த்தாற்போல் தான்! அக்குழந்தையின் அழகைப் பார்க்கப் பதிஞயிரங் கண்கள் வேண்டுமே—அந்தக் கவிராயர் நேற்றைத்தினம்—

தே. பப்பரா, என்ன பொய் பேசுகிருய்! சற்று முன்பாக குழந்தை அவலக்ஷணமா யிருக்கிற தென்ருய், இப்பொழுது குழந்தையின் அழகைப் பார்க்கப் பதிஞயிரங் கண்கள் வேண்டுமென்கிருய்! உண்மையைக்

கூறு. பொய் பேசினல் எனக்குக் கோபம் வரும், சன்மிஷ்டையின் குழந்தையைப் பார்த்தனையா இல்லையா நீ ?

ப. சன்மிஷ்டா தேவிக்காவது, குழந்தையாவது ? குழந்தை யேதம்மா ?

தே. இதைக்கொண்டா இவ்வளவு பேசினை ?

ப. ஆமாம், அம்மணி.—அந்தக் கவிராயரின் பெயர் மாங்கொட்டைக் கவிராயர். அவர்—

தே. அவர் சமாசாரம் நாளை விசாரிக்கிறேன். நீ போய் சன்மிஷ்டையின் தாதி யொருத்தியிடம் கூறி, சன்மிஷ்டையை நான் மிகவும் அவசரமாக அழைத்து வரச் சொன்னதாகச் சொல்.

ப. உத்திரவுபடி. பிறகு அந்தக் கவிராயர் சமாசாரம்—

தே. அதெல்லாம் அப்புறம் ஆகட்டும். முன்பு போய்ச் சொல்.

ப. இதோ போகிறேன். கவிராயரை மறக்க வேண்டாம். [போகிறான்.]

தே. இப்புத்தியற்றவனை ஏனோ அரண்மனை விதூஷகனாக ஏற்படுத்தினார் மஹாராஜா? புத்தியற்றவனா யிருக்கிறானே, இவன் கூறுவதைக்கேட்டு எல்லோரும் நகைப்பார்களென்றே விதூஷகனாக்கினாரோ என்னவோ ? இவன் சிநேகிதன் யாரோ ஒரு கவிராயனிருக்கிறானும், அவனைக் குறித்து எந்நேரமும் என்னைத் தொந்தரவு செய்துகொண் டிருக்கிறான்.—இதிருக்கட்டும்--சன்மிஷ்டையின் சங்கதியைச்சற்று யோசிப்போம். அவள் வந்தவுடன் விசாரிப்பதில் உண்மை வெளியாகாவிட்டால், மஹாராஜாவையும் வரவழைத்து இவ்விருவரையுந் தனித்திருக்கச் செய்து, அவர்கள் பேசிக்கொள்வதை மறைவிலிருந்து கேட்டு, உண்மையை அறியலாம். இதில் எப்படியும் உண்மை வெளியாகி விடும்.

பப்பரன் வருகிறான்.

ப. அம்மணி, அந்தக் கவிராயர் வந்து கொண்டிருக்கிறார்.—

தே. பப்பரா, நான் சன்மிஷ்டையை அழைத்து வரச் சொன்னேனே.

ப. இதோ வருகிறார்கள் சன்மிஷ்டா தேவி.—நான் தங்களிடங் கூறின கவிராயரும் வந்திருக்கிறார்.

சன்மிஷ்டை வருகிறாள்.

தே. கவிராயரைப் பிறகு பார்க்கிறேன். இப்பொழுது நீ போயிரு வெளியே. [பப்பரன் போகிறான்] சன்மிஷ்டை, உட்கார், ஏன் நிற்கிறாய்? எது எப்படி யிருந்தாலும் நீயும் ராஜபத்னிதானே.

ச. அம்மா, எல்லாம் தங்களுடைய அனுக்கிரகம்.

தே. உனக்குத் தேகம் எப்படி யிருக்கிறது? உன்னை நான் பார்த்து சற்றேறக்குறைய பத்துமாதகால மாயிற்றே.

ச. இப்பொழுது சவுக்கியந்தான்.

தே. சன்மிஷ்டை, உன்னுடைய குழந்தை எப்படி யிருக்கின்றது?

ச. என்—குழந்தையா?—

தே. சன்மிஷ்டை, என்னிடம் ஒன்றும் ஒளிக்காதே. உனக்கொரு குழந்தை பிறந்திருக்கிறதென்று எனக்கு நன்றாய்த் தெரியும். இனி ஒளிப்பதிற் பயனில்லை. ஆயினும் அதை நீ எப்படி பெற்றாய்? நீ மிகவும் கற்புடையவளென்று எனக்கு நன்றாய்த் தெரியும். மஹாராஜாவோ எனது பிதாவுக்கு இவ் விஷயத்தைப்பற்றி வாக்களித் திருக்கிறார் என்பது உனக்குத் தெரியாத விஷயமன்று. இப்படியிருக்க நீ ஓர் மைந்தனை யெவ்வாறு பெற்றாய்? உண்மையைக் கூறு.

ச. அம்மணி, நான் உண்மையைக் கூறுகிறேன், மன்னிக்க வேண்டும். நான் சில காலத்திற்கு முன்பு ஒரு நாள், உப்பரிகையின் மேன்மாடியில் இரவில் நித்திரை வராது உலாவிக் கொண்டிருந்தபோது, என் கண் முன்பாக ஒருமுனிவர்பெருமான் தோன்றினார். அவரை நான் வணங்கி நிற்க, அவர், "உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று கூற, நான் என் கதியைக் கருதி, 'எனக்குப் புத்திர பாக்கியம் வேண்டு" மென்று கேட்டேன். அவர் என் கையில் திருநீற்றை யள்ளிக்கொடுத்து, "இதை நீ புசித்தால் புத்திர பாக்கியம் உண்டாகும்" என்று சொல்லி மறைந்தார். அதை யுட்கொள்ள நான் கருதரித்தேன். இதை உம்மிடம் கூற இது வரையில் வெட்கமா யிருந்தது. மன்னிக்க வேண்டும்.

தே. [தனக்குள்] இவ்வளவும் சுத்தப்பொய், சந்தேகமில்லை.— சன்மிஷ்டை, மிகவும் சந்தோஷம். ஆனால் இச் செய்தி மஹாராஜாவுக்குத் தெரியாதா?

ச. தெரியாதென்று நினைக்கிறேன்.

தே. ஆனால் சீக்கிரத்தில் அவருக்குத் தெரிவிக்க வேண்டும். அவரும் மிகவும் சந்தோஷப்படுவா ரென்பதற்குச் சந்தேகமில்லை.—யார் அங்கே ? பப்பரா ?

பப்பரன் வருகிறான்.

ப. அம்மணி, கவிராயரை இட்டுக்கொண்டு வரவா ?

தே. வேண்டாம், நீ சீக்கிரம் சென்று மஹாராஜாவை நான் விரைவில் அழைப்பதாகக் கூறி அழைத்து வா.

ப. கவிராயர் அதிக நாழிகையாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்.

தே. பப்பரா, நான் சொன்னபடி செய் முன்பு. [பப்பரன் போகிறான் சன்மிஷ்டையும் போக முயல்கிறாள்] சன்மிஷ்டை, நீ போகவேண்டியதில்லை, உட்கார். மஹாராஜா உன்னைப்பார்ப்பதில் என்ன தவறு? எப்படியிருந்த போதிலும் நீயும் அவருடைய பத்னிதானே? உட்கார்.—சன்மிஷ்டை, உன்னை இன்றொன்று கேட்கவேண்டு மென்றிருந்தேன். அக்குழந்தை மஹாராஜாவைப் போலவே யிருக்கிறதென்று பேசிக்கொள்ளுகிறார்களே, உண்மைதானா ?

ச. இல்லை, அம்மா. அக்குழந்தை மஹாராஜாவைப் போல் சிறிதும் இல்லை. என் சொல்லை நம்பும். மஹாராஜா என்னைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை என்று உமக்குத் தெரியுமே.

தே. சரிதான், நீ பொய் பேசுவையா யென்ன?—என்ன இன்னும் மஹாராஜா வரக்காணோம். நான் போய்ப் பார்க்கிறேன், நீ யிங்குதானே சற்றிரு.

[ஒரு புறமாகப் போய், மற்றொரு புறமாக வந்து, மறைந்து கேட்கிறாள்.]

யயாதி வருகிறான்.

ய. சன்மிஷ்டை!—நீ ஏன் இங்கு வந்திருக்கிறாய்?

ச. பிராணநாதா, மெல்லப் பேசும்; தெய்வயானை என்னை வரவழைத்தாள். குழந்தை பிறந்த சங்கதி யாரோ சொல்லிவிட்டார்கள். ஏதோ சந்தேகப்படுகின்றாற் போற் றெரிகிறது. நான் உம்மிடம் அன்று கூறினபடி ஒரு பேர்க்குச் சொல்லி யிருக்கிறேன். உம்மைக் கேட்டால் அப்படித்தான் ஏதாவது நடந்திருக்க வேண்டுமென்று நினைப்பதாக நீரும் கூறிவிடும். என்னைப் பாராததுபோல் திரும்பிக்கொள்ளும், தெய்வயானை வந்துவிடுவாள்.

ய. கண்ணே, உன் புத்திக்கு மெச்சினேன்!

[முத்த மிடுகிருன்.]

திடீரென்று தெய்வயானை வெளியே வருகிருள்.

தே. சன்மிஷ்டை! உன் புத்திக்கு நானும் மெச்சினேன்!- ஆஹா! இப்படியா இருந்தது உண்மை? — சன்மிஷ்டை! நீ பொய் பேசுகிறதில்லை யல்லவா? உன்னை மஹாராஜா கண்ணெடுத்தும் பார்க்கிறதில்லை யல்லவா? ஓர் தபசி விபூதி கொடுக்க நீ மைந்தனைப் பெற்றனையல்லவா?—சீ! உன்னை யிகழ்ந்து பய னென்ன? நீ உன் குலத்தின் குணத்தைக் காட்டி விட்டாய்.—இதோ சந்திரகுல சிகாமணி யிருக்கிருர், வியாழ பகவானல் புகழப்பட்ட யயாதி மஹாராஜா! இவரை யல்லவோ கேட்கவேண்டும்! யயாதி ராஜனே, என்ன காரியஞ் செய்தீர்? சந்திரகுலத் தரசர்க்கென்ன நீதி யிருக்கப்போகிறது? வம்சத்தின் குணந்தானே! குருவின் பத்தினியுடன் சேர்ந்த சந்திர னுண்டாக்கிய குலத்திலுதித்த நீர், கூறிய மொழியினின்றுந் தவறியது, ஓர் ஆச்சரியமோ?

ய. பிராணநாயகி, நான் சொல்வதைக்கேள்.—

தே. பிராணநாயகி, என்று இன்னொரு முறை என்னை அழைக்கவேண்டாம். அதோ நிற்கிருள் உம்முடைய பிராணநாயகி.—சன்மிஷ்டை, ஏன் உனக்கு விபூதி மந்திரித்துக்கொடுத்து கர்ப்பமுண்டாக்கிய வாய்மை தவருத தவ சிரேஷ்டர் இதோ நிற்கிறரே, அவரைப் பாராது ஏன் தலைகுனிந்து நிற்கிருய்? இன்னும் அதிகமாகவிபூதி மந்திரித்துக் கொடுக்கச் சொல்!

ய. தெய்வயானை, நான் வாய்மை தவறினேன், உண் மையே. ஆயினும், நான் சொல்வதைக் கேள்.—

தே. நான் இனி உமது சொல்லைக் கேட்கவேண்டிய தில்லை. யார் கேட்கவேண்டுமோ அவர்களிடங் கூறும். இனி உம்முடைய அரண்மனையில் ஒரு க்ஷணமும் இரேன் இந்த க்ஷணமே என் பிதா விடம் போகவேண்டும்.—

ய. தெய்வயானை, வீணைக் கோபித்துக்கொள்ளாதே. இப்பொழுது உன் பிதாவிடம் போய் இதைக் கூறு வையாயின், அவர் என்னைச் சபிப்பார். அது உனக் குச் சந்தோஷத்தை யுண்டாக்கப் போகிறதோ? அத்தீங்கு உன்னையுஞ் சாருமன்ருே? வேண்டாம், வேண்டாம், அவசரப்படாதே.

[அவள் கரத்தைப் பற்றப்போகிருன்.]

தே. [தடுத்து] தொடாதீர் என்னை! என் மைந்தனை யழைத்துக்கொண்டு இக்ஷணமே புறப்படுகிறேன். நீர் சன்மிஷ்டையுடன் கூடி வாழ்ந்து சுகமாயிரும்.—பப்பரா!

பப்பரன் வருகிறான்.

ப. அம்மணி, இதோ அழைத்துக்கொண்டு வந்து விட்டேன் கவிராயரை!

தே. என் தாதியரை யழைத்து என் சிவிகையைக்கொண்டுவரச்சொல் சீக்கிரம்! போ சீக்கிரம்.

[பப்பரன் போகிறான்.]

மஹாராஜா, நான் இனி இங்கிருப்பது நியாயமன்று. நான் போய் வருகிறேன். [போகிறாள்.]

ய. தீர்ந்தது என்னுடைய வேலை! அழிந்தது என் கீர்த்தி! ஒழிந்தது என்னுடைய அரசு!—சன்மிஷ்டை, இவ்வளவிற்கும் நீ யல்லவோ காரணமா யிருந்தாய்? தெய்வயானை சுக்ராசாரியிடஞ் சென்று நடந்த செய்தியைச் சொன்னவுடன் என்னை நீறாகும்படி சபித்தாலும் சபித்து விடுவார். அவர் என்னிடம் வந்து, இப்படி நடந்ததா, என்று கேட்பாராயின் அவருக்கு நான் என்ன உத்திரம் சொல்வது? அவருடையமுகத்தை நான் எப்படிப் பார்ப்பேன்? யயாதி ராஜன் தான் கூறிய சொல்லினின்றும் பிறழ்ந்தானென்று மற்றதேசத் தரசர்களெல்லாம் பரிஹசிப்பார்களே நாளை. இவ்விழியசொல்லை நான் எவ்வாறு பொறுப்பேன்? எல்லோரும் புகழக் கீர்த்தி பெற்ற பழமையான சந்திரகுலத் தரசனாய்ப் பிறந்து அக்குலத்திற்கு இவ்வசையைக் கொண்டு வந்தேனே! இதற்கோ நான் இதிற் பிறந்தது?— சீ! இனி நான் உயிர் வாழ்வது நியாயமன்று! மானம் போனபின் உயிர் வாழ்பவன் பதராகும். சீ! என துயிரை சுக்ராசாரி வருமுன் மாய்த்துக்கொள்ளுகிறேன். [உடைவாளை உருவுகிறான்.]

ச. (தடுத்து) பிராணநாதா! பிராணநாதா! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்? எனக்காக இல்லாவிட்டாலும் நமது குழந்தையின் முகத்தைப் பார்த்தாதாவது மனதிரங்கி உயிர் வாழ்ந்திரும். சுக்ராசாரி வந்தால் நானே குற்றஞ் செய்தவளெனக் கூறி, அவரிடுஞ் சாபத்தை நானே யேற்றுக் கொள்ளுகிறேன்.

ய. சீ! பேசாமலிரு.—இப்பெண் மக்களாற்ருன் இவ்வுலகிலுள்ள துன்பமெல்லாம் உண்டாகிறது. இதற்கென்றே ஈசன் இவர்களைப் பிறப்பித்தான் போலும்!

பப்பரன் வருகிருன்.

பப்பரா, காஞ்சேயன் எங்கே?

ப. கவிராயரிடம் பேசிக் கொண்டிருக்கிருரென்று நினைக்கிறேன்.—

(விரைவாக ஒரு புறம் பப்பரனைத் தள்ளிவிட்டு யயாதி போகிருன், சன்மிஷ்டையும் போகிருள்.)

## ஐந்தாம் அங்கம்.

இடம்—தோட்டத்தில் வசந்த மேடை. காலம்—காலே.

யயாதியும், சன்மிஷ்டையும், காஞ்சேயனும், உட்கார்ந்திருக்கிருர்கள்.

சமஸ்தான வித்வான் பாடுகிருன். சற்று தூரத்தில் பப்பரன் ஓர் துணைக்கருவியை வேடிக்கையாய் வாசிக்கிருன்.

ய. காஞ்சேயா, என்னுடைய துக்கம் சாதாரணமாக மனிதர்களைப் பீடிப்பதைப் போன்றதா யிருந்தால் சங்கீதத்திஞல் மாறும். இது அப்படிப்பட்ட தன்றே! இதைப் போக்க ஒரு பரிஹாரமும் இல்லை—என் கதி!

ப. [யயாதியின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து] மஹாராஜா, என் பாக்கியமே பாக்கியம்! தாங்கள் சந்தோஷமா யிருக்கும் பொழுது கவிராயரைப்பற்றி கேட்கும்படி சொன்னீரே!

ய. காஞ்சேயா. இம்மூடனை என்ன செய்வது?—யார் அந்தக் கவிராயர்? என்ன சமாசாரம்? சொல்.

ப. மஹாராஜா, கிரேதாயுகத்திலே, விண் மீன்கள் தாரககவிராயர் என்று ஒரு கவிராயர் இருந்தார், தங்களுக்குத் தெரியுமே.—

ய. பப்பரா, அதையெல்லாம் நான் கேட்கவில்லை. இப்பொழுது இந்தக்கவிராயரைப்பற்றி ஏதாவது கூறுவதாஞல் கூறு.

ப. மஹாராஜா, உத்திரவுபடி.—அவர் பிரபல வித்வான். அநேக கிரந்தங்களைப் பாடியிருக்கிருர். மாங்காய்ப்பாதி ஊறுகாய்ப்பாதி வெண்பா, எலிவளைப்புராணம், பூனைக் கொச்சகம் முதலியவைகளைப் பற்றி தாம் முன்பே கேட்டிருக்கலாம்.

கா. மஹாராஜா, இப்படியாவது காலம் போக்கலாம் விதூஷகா, அந்த கிரந்தங்களிலிருந்து ஏதாவது பாடல் கேட்போம்.

ப. உத்திவுரபடி.—பூஜைக் கொச்சகம்.

கத்தரிக்காய்ப் பொரியலையுங் கசப்பில்லாக்கீரையையும்
பத்திபத்தி யாகவைத்தும் பாராமே யெடுத்தருந்திச்
சித்திரம்போல் நின்றுவிட்ட சிவபூசைப் பூஜையேநான்
எத்தனை நாள் பத்திசெய்வேன் என்னையுநீ யிகழுவதோ.

மாங்காய்ப்பாதி ஊறுகாய்ப்பாதி வெண்பா

பிஞ்சியிலே தான்பழுத்துப் பிள்ளைகளால் மொத்துண்டு
மஞ்சணிறம் வாய்த்துவிட்ட மாங்காயே — கஞ்சியிலே
ஊறுகா யாகி உதவாத வற்றலுடன்
மீறுகா யாகு மிக.

ய. இப்பொழு தென்னுடன் விளையாட வேண்டாம், போ.— [பப்பரன் சங்கீத வித்வானுடன் போகிறான்] காஞ்சேயா, என் மனக் கவலையைப் போக்க வழி யில்லையா?

கா. மஹாராஜா, தாம் இதைக்குறித்து அதிகமாகக்கவலைப்படலாகாது. க்ஷத்திரிய குலத்திற் பிறந்த தம்மைப் போன்றவர்கள் இடுக்கண் வந்துற்றகாலைத் தளராத மனத்துடன் பொறுத்திருப்பதே தகுதியாகும். இது தெய்வாதீனம்.

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்

என்றவாறு தெய்வ கடாக்ஷப்படி எல்லாம் நடக்கிறது—தாம் வருத்தப்பட்டென்ன பயன்?

ய. ஆம், காஞ்சேயா, அன்று அம்மஹரிஷி விதியை மதியால் வெல்ல ஒருவராலும் ஆகாதெனக் கூறியதி னுண்மையை இன்றே கண்டேன். எனக்கிம்மாதிரியான சங்கடம் நேரிடுமெனத் தெரிந்திருந்தும் தடுக்க வலிமை யற்றிருந்தே னல்லவா? எல்லாந் தெய்வம் விதித்தபடி யாகிறது. நாம் வருந்தி என்ன பயன்?

ச. ஆனல் பிராணநாதா, எல்லாம் விதியின்படி யாகிறதெனக் கருதி நாம் ஒன்றும் செய்யாது செயலற்றிருத்தல் முறையோ?

ய. பெண்ணே, அப்படியல்ல. "தெய்வத்தா லாகா தெனினும் முயற்சி தன் மெய்வருந்தக் கூலி தரு" மென்று நம்மாலியன்றதை எப்பொழுதும் செய்ய வேண்டும். அதனுலு மாகாவிட்டால் விதிப்பயனெனக்கருதி வருந்தாதிருக்க வேண்டும்.

கா. ஆனல், மஹாராஜா, எல்லாம் விதியின் வண்ணம் ஈடேறுமாயின் நம்முடைய செயலென்ன விருக்கிறது?

ய. காஞ்சேயா, அப்படியன்று, தெய்வத்தினுடைய செயல், மூவகைப்படும். சில வேளைகளில் ஈசன் ஆன்மாக்களைத் தானக ஆட்டுவார், சில வேளைகளில் மற்றவர்களைக் கொண்டு ஆட்டிவைப்பார், சில வேளைகளில் இரண்டு மின்றி அவைகளாக எதேச்சையாய்ச்செல்ல விடுவார். இதற்குக் காரணம் நாம் கேட்கலாகாது. அது பேரறிவாளராகிய அவர் ஒருவருக்கே தெரியும். ஆகவே நாமும் நம்மாலியன்ற அளவு முயலவேண்டும். நாம்செயலற்றிருத்தல் தவறு.—

பப்பரன் வருகிறன்.

ப. மஹாராஜா, சுக்ராசாரியாரும்தெய்வயானைத் தேவியும் அரண்மனை வாயிலில் வந்திருக்கிறர்கள்.

ய. காஞ்சேயா, நாம் நினைத்த வண்ணம் வந்துவிட்டார். இனி என்ன செய்வது? நீ போய் நல்வரவு கூறி, அவருடைய கோபத்தைத் தணித்து அழைத்துக் கொண்டு வா.

ப. கவிராயரும் வாயிலில் வந்து நிற்கிறர்—
[பப்பரனை இழுத்துக்கொண்டு காஞ்சேயன் போகிறன்.]

ச. பிராணநாதா, உமக்கு நேரும் இவ்வளவு துயரத்திற்கும் நானே காரணமா யிருக்கிறேனே! என்னுடைய துர்ப்பாக்கியமே துர்ப்பாக்கியம்!

ய. கண்ணே, நீ இனி யேன் வருந்துகிறய்? உன் மீதுங் குற்றமில்லை. நீ வந்தவழி அது. அவரவர்கள் செய்த நல்வினை தீவினைப்பயனை அவரவர்கள் அனுபவிக்க வேண்டுமல்லவோ? கண்ணே, சுக்ராசாரியார் இங்கு வரும்போது அவர் எதிரில் இராதே. சற்று மறைவாயிரு. வரவேண்டுமென்றல்—

[சன்மிஷ்டை மறைவிடம் போகிறள்.]

**சுக்ராசாரியும், தெய்வயானையும், காஞ்சேயனும் வருகிறார்கள்.**
**யயாதி நமஸ்காரம் செய்கிறான்.**

சு. அடே, க்ஷத்திரியப் பதரே! யயாதி! என்ன காரியஞ் செய்தனை நீ? அடே! நான் உனக்கு இட்ட கட்டளையினின்றுந் தவறினை யல்லவா? அடே! என்னை அவமரியாதை செய்தனை யல்லவா? அடே! என்னை யாரென்று மதித்தனை? இம் மூவுலகையும் ஒரு க்ஷணப்போதில் கிடுகிடென்று நடுங்கச் செய்யுஞ் சக்தியுள்ள அசுரகுருவாகிய சுக்ராசாரி யென்பதனை மறந்தனையோ? உன்னையும், உன் வம்சத்தோரையும், உனது அரசையும், அரைக்ஷணத்தில் பஸ்மீகரம் செய்யத்தக்க வலிமையுடையவன் என்பதைக் கருதவில்லையோ? அடே! க்ஷத்திரியப் புஞ்சமே! நீ யெனக்கு வாக்களித்த தென்ன, இப்பொழுது நடத்தியதென்ன? சக்கரவர்த்தியா யிருந்து நீயே இப்படி வாய்மைதவறுவையாயின் உனது குடிகளெல்லாம் தர்மவழியில் எப்படி நடப்பார்கள்? சந்திர வம்சத்துச் சக்கரவர்த்தியாயிற்றே யென்று கர்வம் பிறந்து விட்டதோ? அடே யயாதி! உன் வாய்மையினின்றுந் தவறினை யல்லவா? பிடி சாபம்! எனது புத்ரியின் சுகத்தை யழித்து, உனது சத்யத்தைக் கெடுத்து, எனக்கு அவமரியாதையைக் கொடுத்து, இவ்வளவு துன்பத்தையும் விளைத்து, உன்னை யித்தீயவழியில் விடுத்தது, உனது யௌவனமல்லவோ? இதோ, உடனே அதைக் குலைத்து விடுகிறேன். பிடி சாபம்! இன்று முதல் உனது யௌவனம்போய் விருத்த திசை யடைந்து நரை பிணி மூப்புடைய வயோதிகனாகக் கடவை! எனக்கிப்பொழு திருக்குங் கோபத்தால் உன்னை ஒரு க்ஷணத்தில் நீறாக்கி விட்டிருப்பேன்! ஆயினும் பச்சாத்தாபப்பட்டு இவ்வளவுடன் விட்டுவிட்டேன்.—

ய. சுவாமி, தன்யனானேன், தாமிட்ட கடுஞ்சாபத்தை ஏற்றுக் கொண்டேன். எல்லாந் தம்முடைய அருள், ஆயினும் நடந்த சமாசாரத்தை விசாரியாது முனிந்து சாபமிட்டு விட்டீரே யென்று மாத்திரம் அடியேனுக்கு வருத்தமா யிருக்கிறது. தாமறியாதது ஒன்று மில்லை. தமக்கு நானென்ன நீதி சொல்லப் போகிறேன்?

சு. என்ன நடந்த சமாசாரம்?

ய. தாம் சற்று கோபித்துக் கொள்ளாது உத்திரவளிக்கும் பக்ஷத்தில் கூறுகிறேன்.

சு. இல்லை, சொல்.

ய என்மீ தருள் புரிந்து தாம் இந்த ஆசனத்தின் மீது எழுந்தருள வேண்டும். [ஓர் ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்கிறான்.] மும்மூர்த்திகளும் புகழப்பெற்ற தவத்தையுடைய முனி புங்கவரே, நான் தமது கட்டளைப்படி நடக்க வேண்டுமென்று சன்மிஷ்டையைக் கண்ணெடுத்தும் பாராது நடந்து வந்தேன். அப்படியிருக்க ஒரு நாள் இரவு எனக்கு நித்திரை வராமல் நந்தவனத்திற் சென்று உலாவலாமென் றங்கே செல்ல, அப்போது சன்மிஷ்டை யென்னைச் சந்தித்து தன்னைச் சேரும்படி கேட்டாள். அதை நான் பிடிவாதமாய் மறுக்க, பிறகு தனக்கு ஒரு வரம் வேண்டுமென்று கேட்டாள். இன்னது கேட்கப் போகிறாள் என அறியாது அப்படியே ஆகட்டுமென்று ஏற்றுக்கொள்ள, தனக்குப் புத்ர சந்தானம் வேண்டுமென்று கேட்டாள். இந்த சந்தர்ப்பத்தில் நான் என்ன செய்யக்கூடும்? தாமே சொல்லும். நானோ சந்திரகுலத்திற் பிறந்த க்ஷத்திரியன், ஓர் வரம் வேண்டுமென்று கேட்போர்க்கு அதை மறுத்தல் நியாயமன்று. கொடுக்கிறேனென்று ஏற்றுக்கொண்டபின் மறுத்தேனாயின், எனது குலத்தை யழித்து, எனது முன்னோரை யெல்லாம் எரிவாய் நரகில் வீழ்த்துவேனாவேன்! அப்படி என் குலத்திற்கு அபகீர்த்தியைக் கொண்டு வருவதை விட, தம்முடைய சாபத்தைப் பெறுவதே நலமெனக் கருதிஅவளுடைய வேண்டுகோளுக் குடன்பட்டேன். இதுவே நடந்த சமாசாரம். சுவாமி இனி தாங்கள் என் நடத்தை சரியோ தவறோவென்று கூறலாம். ஆயினுந் தாம் இவைகளை யெல்லாங் கேளாது கோபங்கொண்டு கொடிய சாப மிட்டுவிட்டீர். அது என் தீவினைப் பயனே யென்று கொள்ளவேண்டும்.

கா. சுவாமி, நடந்தவிஷயம் இவ்வண்ண மிருக்கத் தாம் முனிந்து எமது மஹாராஜாவுக்குக் கொடிய சாப மிட்டுவிட்டீர். சிறியோர்களாகிய நாங்கள் செய்த குற்றத்தைப் பெரியோராகிய தாம் பொறுக்காவிட்டால் வேறு யாவர் பொறுக்கப்போகிறார்கள்? அதுவுமன்றி இச்சாபம் தம்முடைய புதல்வியையும் வருத்துமன்றோ? மஹாராஜா இப்பொழுதே விருத்த திசையை யடைந்தால் தெய்வயானைத் தேவிக்கு அது சந்தோஷமா யிருக்குமோ? ஆதலால், சுவாமி, இவ்விஷயங்களை யெல்லாம்நன்றாய் யோசித்து எப்படியாவது அச்சாபத்தை நீக்கியருள

வேண்டும். கருணைக் கடலே, தமது புதல்வியும், இந்நகர வாசிகளும், அடியேனுந் துக்க சாகரத்தில் மூழ்கா வண்ணம், மஹாராஜா அறியாமற் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்.

ச. [வெளிவந்து சுக்ராசாரி பாதத்தில் வீழ்ந்து] எமது குலத்தை யீடேற்ற வந்த குருவே! அபயம்! அபயம்! சுவாமி, குற்றஞ்செய்தவள் நானே, மஹாராஜாவின்மீது ஒரு குற்றமுமில்லையே. நானன்றோ, அவரை தமக்குக் கொடுத்த வாக்குத் தத்தத்தினின்றுந் தவறச் செய்தேன்? சுவாமி! குற்றம் ஒருபக்கமும், தண்டனை ஒருபக்கமும் இருக்கலாமா? கிருபா மூர்த்தி! என்னைத் தண்டியும். என் பிராணநாதருக் கிட்ட கொடிய சாபத்தை நீக்கியருளும். தெய்வயானை, நீயும் உன் தந்தையைவேண்டிக்கொள். ஐயோ! நமது கணவருக்குச்சாபம் நேர்ந்தால் நமக்குத்தானே துன்பம்? அவருடன் இத்துன்பத்தை அனுபவிக்க வேண்டுமன்றோ? நான் உனக்குச் செய்த கொடுமைகளை யெல்லாம் மறந்து என்னுடன் சேர்ந்து நீயும் உன் தந்தையை வேண்டிக்கொள்.

தே. சன்மிஷ்டை, நீ கூறுவது உண்மைதான். எனக்கு வந்த கோபத்தால் நான் அதை மறந்தேன்.—தந்தையே! நான் ஏதோ கெடுமதியினால் உம்மிடம் வந்து முறை யிட்டேன் மேல் நடக்கப்போகின்ற காரியம் அறியாது. தந்தையே, என் பிராணநாதருக்கு நீர் கொடிய சாப மிட்டுவிட்டீரே, அதை நாங்களும் அவருடன் அனுபவிக்கவேண்டி வந்ததே! அப்பா, நான் புத்தியற்று அறியாத் தன்மையால் இதைச் செய்துவிட்டேன். மன்னிக்கவேண்டும். அண்ணா, எப்படியாவது நீர் இட்ட சாபத்தை நீக்கியருளும்! எம்மீது அருள்புரியும்! அருள் புரியும்!

சு. [தனக்குள்] சீ! நானும் என்ன தீர்க்க யோசனை செய்யாது சாபமிட்டுவிட்டேன். முன் பின் பாராமல் வந்த கோபாவேசத்தால் எனது மருகனுக்கே தீங்கு விளைத்துவிட்டேன்! இனி என்ன செய்யலாம்? [யயாதியை நோக்கி] யயாதி, இது ஊழ்வினையென்று நாம் கருதவேண்டும். நான் நன்றாய்ச் சமாசாரத்தை விசாரியாமலும் பின் வருவதை யோசியாமலும் உனக்குச் சாப மிட்டுவிட்டேன். இனி என்னால் அச் சாபத்தை நீக்க முடியாது. நடந்த காரியத்தைப்பற்றி இனி வருத்தப் படுவதிற் பயனென்ன? ஆயினும் ஒன்று சொல்கிறேன், கேள். உன் மக்

கள் யௌவனதிசையை யடைந்தபின் அவர்களுள் எவனுக்காவது உனது விருத்த திசையை சிலகாலம் வஹித்திருக்கும்படி கொடுத்து, அவனது யௌவன திசையை நீ வாங்கிக்கொண்டு, சின்னாள் உனது மனைவிகளுடன் சுகித்திரு. பிறகு பழயபடி இளமையைக் கொடுத்துவிட்டு உனது விருத்த திசையை ஏற்றுக்கொள். இவ்வண்ணம் உனது முதுமையையேற்ற மகனுக்கு உனது ராஜ்ஜியத்தை ஒப்பித்துவிட்டு, நீ உன் மனைவியருடன் கானகஞ் சென்று தவம் புரிந்து நற்கதி யடைவாய்!

ய. சுவாமி, தமது சித்தத்தின்படி நடக்கின்றேன். தமக்குத் தமியேனிடம் இவ்வளவு அருளிருப்பது எனது முன்னோர் செய்த பூஜாபல னென்றே கருதவேண்டும்.

கா. சுவாமி, எமது வேண்டுகோளுக் கிரங்கி அருள் புரிந்த தமக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யப்போகிறோம்?

ச. குலகுருவே, இவ்வளவாவது தமது சித்த மிரங்கிற்றே!

சு. தெய்வயானை, நீ சற்று பொறுமையுள்ளவளா யிருந்தால் இவ்வளவு தூரம் நடந்திராதே. இனியாவது பிறர் செய்யுங் குற்றத்தைப் பொறுத்திடுங் குணமுடையவளா யிரு. நீ முன்பின் யோசியாமல் என்னிடம் வந்து முறையிட்டமையால், நானும் தீர்க்காலோசனை செய்யாது சாப மிட்டேன். இப்பொழுது அச்சாபத்தை அனுபவிப்பவர்கள் யார்? போனது போகட்டும். இனி நீயும் சன்மிஷ்டையும் சச்சரவிடாமல் ஒருமையாய் ஒத்து வாழுங்கள்,—யயாதி, உன்னிரண்டு மனைவியரையும் இரண்டு கண்கள் போல் பாவித்து வா.

ய. சுவாமி தமது உத்திரவின்படி.

ச. தெய்வயானை, நான் உனக்குச் செய்த தீமைகளையெல்லாம் இனி யாகிலும் மன்னிக்கவேண்டும்.

தெ. சன்மிஷ்டை, முடிவில் நானன்றோ தெரியாமையால் உனக்குத் தீங்கிழைத்தேன். நீயே என்னை மன்னிக்கவேண்டும்.

சு. யயாதி ராஜனே, நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்.

## பிற்கூறு.

இடம்.—யயாதி அரண்மனையிலோர் அறை. காலம்—மாலை.

**யயாதி, சன்மிஷ்டை, தெய்வயானை** இம்மூவரும் உட்கார்ந்திருக்கிறார்கள்.

**பப்பரன்** சற்றுதூரத்தில் நின்றவண்ணம் தூங்கிக்கொண்டிருக்கிறான்.

**ய.** தெய்வயானை, சன்மிஷ்டை, நம்முடைய குமாரர்கள் யது, பூரு, இருவருக்கும் பதினாறு வயதாகி விட்டது, சுக்ராசாரி கூறியபடி அவர்களி லொருவனுக்கு எனது மூப்பைக் கொடுத்து, அவனது இளமையை நான் வஹித்து சிலகாலம் வாழலாமென் றிருக்கிறேன்; என்ன சொல்லுகிறீர்கள்?

**தெ.** பிராணநாதா, மூத்த குமாரன் இதற்குள் முதுமையையடைவது நியாயமல்ல. உலகம் நகைக்கும், அதுவுமன்றி அவன் உமது பிற்காலம் அரசுக் குரியவனாயிற்றே. சன்மிஷ்டையின் குமாரன் பூரு இருக்கிறான். அவனுக்குக் கொடும்.

**ச.** பிராணநாதா, அப்படியே யாகட்டும். பூருவிற்கே உமது முதுமையைக்கொடுத்து, அவனது இளமையை நீர்பெறும். எப்படியாவது உமக்கு நன்மையுண்டாவதொன்று.

**ய.** அப்படியல்ல. இருவரையும் இங்கு வரவழைத்துக் கேட்போம் எவ னிசைகிறானெனப் பார்ப்போம்.—பப்பரா!—

**ப.** [நித்திரை நீங்கி] மஹாராஜா!

**ய.** எங்கே இருக்கிறார்கள் அவர்கள்?

**ப.** வாயிலில் காத்துக்கொண்டிருக்கிறார் இன்னும்.

**ய.** யார் காத்துக்கொண்டிருக்கிறது?

**ப.** கவிராயர்.

**ய.** பப்பரா, இன்னுந் தூக்க மயக்கந் தெளியவில்லையோ? நீ விரைந்து சென்று யதுவையும், பூருவையும் நான் அழைப்பதாகக் கூறி அழைத்துவா.

**ப.** அப்படியே, மஹாராஜா. [போகத்திரும்பும்போது ஓர் மகரிஷி வர] இதோ யாரோ ஒரு மஹரிஷி வருகிறார் [போகிறான்.

மஹரிஷி வருகிறார்.

**ம.** யயாதி ராஜனே!—விதியை மதியால் வெல்ல லாகுமோ?

**ய.** விதியை மதியால் வெல்ல லாகாது! வெல்ல லாகாது! வெல்ல லாகாது! சுவாமி, அடியேனுக்குப் புத்தி

வந்தது. முன்பு நான் தம்மை யெதிர்த்துக் கூறிய தற்காக மன்னிக்க வேண்டும். தாம் திருவாய் மலர்ந் தருளிய வண்ணமே நடந்தது. அதனுண்மையைத் தாமே பிரத்தியக்ஷமாய்க் காணலாம். இதோ என்னுடைய இரண்டு மனைவியர்கள். என்னுடைய நிலைமையைத்தான் தேவரீர் காண்கிறீரே! சுவாமி ஒப்புக் கொண்டேன், விதியை மதியால்வெல்ல லாகாது.

ம. யயாதி, எதற்கும் அதைரியப்பட வேண்டாம். உனக்கு இக்கொடிய சாபமிட்ட சுக்ரபகவான் இதற்குப் பரிகாரமுங் கூறி யிருக்கிறு ரல்லவா? அதன்படி நடந்து சுகமனுபவிப்பாயாக!

யதுவும், பூருவும் பப்பரனும் வருகிறுர்கள்.

யயாதியை வணங்குகிறுர்கள்.

பூ. [மகரிஷியை வணங்கி] சுவாமி, நமஸ்காரம்.

ம. அப்பா, நீ சக்ரவர்த்தி யாவாயாக!

ய. அப்பா, உங்களை நான் இப்பொழுது வரவழைத்தது ஒரு முக்கிய காரணம் பற்றி. நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். நான் இப்பொழுது முதுமை யடைந்திருக்கிறே னல்லவா? எனக்குச் சில காலம் யௌவனத்தை யடைந்திருக்க வேண்டுமென்று விருப்ப மிருக்கிறது. ஆகவே உங்களிருவரில் ஒருவன் தனது யௌவனத்தை எனக்குக் கொடுத்து எனது முதுமையைத் தான் பூணவேண்டும். இதற்கு யார் உடன்படுகிறீர்கள்? கட்டாயப் படுத்துகிறேனென் எண்ண வேண்டாம். உமக்கே விருப்பமாயின் கூறுங்கள்.

யது. தந்தையே, உமது கேள்வி எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. இவ்வுலகில் எவனுவது இளமையை விட்டு முதுமையை வஹிக்க விரும்புவானே?

ய. அப்பா, அவ்வா றல்ல. சிலகாலங் கழித்து எனது முதுமையை நான் வாங்கிக்கொள்கிறேன் மீண்டும்.

யது. எப்படி யிருந்த போதிலும் இளமைப் பருவம் ஒரு தரம் கழிந்த பின் மறுபடியும் வருமா? அதுவுமன்றி மனிதனுடைய ஆயுளில் இளமையேசிறந்தது எதனிலும். அதனைக் கொடுத்து விடுவதென்றால் எனக்கிஷ்டமில்லை. என்னை மன்னிக்க வேண்டும்.

தே. நன்றாகக் கூறினை குமாரா.

ய. பூரு, நீ யென்ன சொல்லுகிறுய்?

பூ. தந்தையே, என்னைக் கேட்பானேன்? இதோ பெற்றுக் கொள்ளும் என் இளமையை.

ய. பூரு, நன்று யோசித்துச்சொல். அரை மனத்துடன் எனக்குக் கொடுக்க வேண்டாம். நான் வற்புறுத்துகிறேனென்றெண்ணிக் கூறுதே.

பூ. தந்தையே, இவ்வுடல் உம்மால் வந்ததன்றோ? ஆகவே அது உம்முடைய பொருளேயாகும். நான் இப்புவியில் உமது புத்திரனாகப் பிறந்து உமக்கிந்த அற்ப உபகாரமாவது செய்யாமற் போவேனாயின் நான் பிறந்தென்ன பலன்? ஐயனே, நீர் கேட்பதை நான் மறுப்பனோ? என துயிரைக் கேளும், அது உமக்கு அணுவளவேனும் சந்தோஷத்தைக் கொடுக்குமென்று எனக்குத் தோன்றும் பக்ஷத்தில், இக்ஷணமே தருகிறேன். அற்பனாகிய என்னைத் தாம் ஒன்று கேட்கும் பாக்கியத்தைப் பெற்றேனே யின்று! தமக்கு நான் அணுவளவு உபகாரம் செய்ய நேர்ந்ததே யின்று! இன்றே என் ஜென்மம் சாபல்யமாயது! இன்றே நான் புனிதனானேன்! இன்றே நான் இப்புவியிற் பிறந்த பயனைப் பெற்றேன்!

ய. நன்றாகக் கூறினை, கண்ணே.

சு. நன்றாய்க் கூறினை, பூரு, நன்றாய்க் கூறினை! மகன் பிறந்தால் இப்படிப்பட்ட மகன் பிறக்கவேணும். ‘மகன் தந்தைக்காற்று முதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் எனுஞ் சொல்’ என்றவாறு உனது தந்தையின் பாக்கியமே யிது. பூரு, உன் புத்தியை மெச்சினேன்!

ய. என்னை மேன்மைப்படுத்த வந்து பிறந்த என்னருஞ் செல்வமே வாராய்! [பூரு சமீபமாய் வர அவனைக் கட்டியணைத்து] நான் பட்ட துயரமெல்லாம் மறந்தேன் உனது வார்த்தையைக் கேட்டு. இனி என்னையொப்பார் யார் இப்புவியில்? உன்னை நான் மகனாகப் பெற்றேனே! அது என் பூஜாபலனே! என் துயர் நீக்க வந்த கற்பகமே, நீ சிலகாலம் எனது முதுமையை வஹித்திரு, பிறகு நான் உன் இளமையை உன்னிடம் ஒப்புவிப்ப தன்றி சுக்ரபகவான் உத்திரவின்படி இவ்வரசினையும் உன்னிடமே ஒப்புவிக்கிறேன்.

ஜெயவிஜயீபவ!

அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை-1. 27—11—’50.

